உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# சிவப்பிரகாசசுவாமிகள்

அருளிச்செய்த

# வெங்கைக்கோவை

மூலம்.



இஃது

ஈ-ா-ா-ஸ்ரீ.

தி-சிதம்பரமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு.

தி-கந்தசாமிபிள்ளையவர்களால்

திரிசிரபுரம்புத்தகவியாபாரம்

தி-சபாபதிபிள்ளை

யவர்களது.

மட்டுவார்குழலம்பாள் அச்சுக்கூடத்திற்பதிப்பிக்கப்பட்டது.

பவ௵-தனுர்-ரவி.

சென்னை - சிந்தாத்திரிப்பேட்டைசாமிநாயக்கர்வீதி-நெ-ர். சஅ.



உ

கடவுள் துணை.

# சிறப்புப்பாயிரம்.



ஏவைக்கடக்கும்விழியாளைவென்றவியலுடையான்
கர்வைப்பொருவுஞ்சிவப்பிரகாசக்கடவுளென்போன்
பாவைப்பலமுறையானுணர்ந்தோர்கள்படித்துணரக்
கோவைத்தமிழ்நல்*திருவெங்கைவாணர்க்குக்கூறினனே.

சிறப்புப்பாயிரம்முற்றிற்று.





## இயலாதியின்றொகை.

| (கிளவி) | (துறை) | (கிளவி) | (துறை) |
|---|---|---|---|
| களவியல். | | வரைவியல. | |
| கைக்கிளை | ௪ | வரைவுமலிவு. | ௭ |
| இயற்கைப்புணர்ச்சி | ௰௫ | அறத்தொடுநிற்றல். | ௧௮ |
| வன்புறை | ௬ | உடன்போக்கு. | ௧௯ |
| தெளிவு. | ௧ | கற்பொடுபுணர்ந்தகவ்வை. | ௨௩ |
| பிரிவுழிமகிழ்ச்சி. | ௨ | மீட்சி. | ௬ |
| பிரிவுழிக்கலங்கல். | ௫ | தன்மனைவரைதல். | ௫ |
| இடந்தலைப்பாடு. | ௫ | உடன்போக்கிடையீடு. | ௬ |
| பாங்கற்கூட்டம். | ௨௪ | வரைதல். | ௧ |
| பாங்கிமதியுடன்பாடு. | ௧௮ | கற்பியல். | |
| பாங்கியிற்கூட்டம். | ௬௧ | இல்வாழ்க்கை. | ௰ |
| ஒருசார்பகற்குறி. | ௧௪ | பரத்தையிற்பிரிவு. | ௨௯ |
| பகற்குறியிடையீடு. | ௭ | ஓதற்பிரிவு. | ௩ |
| இரவுக்குறி. | ௨௭ | காவற்பிரிவு. | ௩ |
| இரவுக்குறியிடையீடு. | ௧௯ | தூதிற்பிரிவு. | ௩ |
| வரைதல்வேட்கை. | ௧௯ | துணைவயிற்பிரிவு. | ௩ |
| வரைவுகடாதல். | ௨௰ | பொருள்வயிற்பிரிவு. | ௩ |
| ஒருவழித்தணத்தல். | ௧௨ | கிளவியில்துறை. | ௩ |
| | | களவியல், | ௨௮௩ |
| வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதல். | ௨௧ | வரைவியல். | ௮௫ |
| | | கற்பியல். | ௫௭ |

ஆ. இயல் ௩-இ கிளவி ௩௩-இ துறை, ௪௨௨-அதிகச்செய்யுள்-௩.

ஆ. செய்யுள் - ௪௨௫.

*-வெங்கைஎன்பது-விருத்தாசலம்.

உ

வெற்றிவேலுற்றதுணை.

# வெங்கைக்கோவை.

## கடவுள்வாழ்த்து.

பூவைமலர்நிறத்தெம்பெருமாட்டிப்பொருப்பரையன்
பாவைவளர்க்குங்கிளிமுன்கையாளொருபான்மருவுந்
தேவைவளர்சடைத்தென்வெங்கைவாணனைச்சேர்ந்துவருங்
கோவைபடர்வதற்குள்ளூன்றுவாமொற்றைக்கொம்பரையே.

## கைக்கிளை

(காட்சி)

பூவும்பழுத்தசெழுந்தீங்கனியும்பொழியமுத
மேவுங்குடங்களிரண்டுடனேயிருமீனுங்கொண்டு
சேவுந்தழகர்திருவெங்கைவாணர்சிலம்பின்மலர்
தூவும்பொழிலிலெதிர்ப்பட்டதாலொருதூமணியே. (க)

(ஐயம்.)

மண்ணோவிரைச்சந்தனவரையோமலர்மாளிகையோ
விண்ணோவலைத்தண்புனலோபழமலைவெங்கையன்ன
பெண்ணோடிருக்கும்பொழுதிளஞ்சேலிற்பிறழுநெடுங்
கண்ணோடிருக்குமுகம்போல்வதாங்கதுகண்டிலமே. (உ)

(இதுவுமது.)

முலைப்பகையோகட்பகையோவவர்தம்முகப்பகையோ
மலைப்பகையாம்விண்முழுதாளியென்றும்வணங்குமயன்
றலைப்பகையாயகரமுடையான்வெங்கைசார்ந்துநின்ற
சிலைப்பகையாகுநறுநுதலார்தந்திருமனையே. (௩)

(துணிவு.)

சேணும்பிலமுமலர்மாளிகையுஞ்செழுஞ்சிலம்பு
நாணும்படிநம்படியேதவப்பயனண்ணியமை
பூணும்பணியரன்வெங்கையின்மாநிழற்பூம்பொழில்வாய்க்
காணும்பிறைநுதலாட்அமவாநின்றுகாட்டியதே. (௪)

(குறிப்பறிதல்.)

பாயுமலர்த்தண்பொழில்சூழும்வெங்கைப்பழமலைசீ
ராயுமுனிவர்தாமேமுனிவருளாக்குதல்போ
னோயுமந்நோய்க்குமருந்துந்தராநிற்குநூற்பகவிற்
றேயுமருங்குற்பெருமுலைமாதர்திருக்கண்களே. (௫)

(இயற்கைப்புணர்ச்சி)

(இரந்துபின்னிற்றற்கெண்ணல்.)

புரந்தாமுமையர்திருவெங்கைவாணர்பொருப்பினின்ற
வரந்தாழயிற்கண்மடமாதிரத்தக்கவாறதனு
லிரந்தாய்குவமிவர்தந்தநாமின்றினியநெஞ்சே
கரந்தானமக்குப்பழியுளதாயிற்கழறுகவே. (சு)

(இரந்துபின்னிலைநிற்றல்.)

தாளுந்தரக்கன்றனைமீண்டெடுத்துய்யத்தண்ணளியா
லாளும்பழமலைவெங்கையன்னீரொன்றலாதுபல
வாளுங்கணையுங்கதிர்வேலுமானுமதர்விழியா
னீளுந்துயர்செய்துவாளாநின்றீரிதுநீதியன்றே. (எ)

(முன்னிலையாக்கல்.)

பாரக்கைச்சூலத்தர்வெங்கையிலேகண்பகைத்துநின்ற
வாரக்கட்பூஞ்சுனைப்போதையெல்லாமடலோடுமடற்
சேரக்கட்டிக்குழற்காட்டிலிடாமற்சிறந்தவலங்
காரக்கட்பேதைதனித்துநின்றாயென்னகாரணமே. (அ)

(மெய்தொட்டுப்பயிறல்.)

மெய்கூறிடும்வரைமங்கைமணாளர்தம்வெங்கையினிற்
பொய்கூறிலஞ்சிலர்போலிலையேயெனப்புல்லிழையிற்
செய்கூறதிலொன்றளவுளதேயிவள்சிற்றிடைதான்
மைகூர்குழலில்வெறிகொண்டுலாவுமதுகரமே. (கூ)

(இதுவுமது)

மன்னிசைவெங்கையுடையபிரான்வரைமானுசுப்பைப்
பொன்னிசைகொங்கையொடித்தாலுநீதைபொருந்துநுமை
மின்னிசைமென்குழலேறன்மின்னீவிர்விளங்கிலிரோ
வின்னிசைவண்டினங்காள்காகதாலியமென்பதுவே. (௰)

(பொய்பாராட்டல்.)

முழுதலங்காரமழுவோன்றிருவெங்கைமொய்குழலுன்
பழுதறுங்கொங்கைக்குடைதுயராற்பனிமாமலய
மழுதகண்ணீரைப்பொருநையென்பாரதன்வெய்துயிர்ப்பை
யெழுதருந்தென்றலெனவேயுலகறியம்புவரே. (௰க)

(இதுவுமது,)

உன்மலைவார்முலைநல்லேர்கவர்ந்ததுதவுதற்குப்
பொன்மலைநாணெண்கழுத்தொடுதாளுறப்பூட்டிவெங்கை
மன்மலைமாதுமைபங்காளன்முன்னம்வளைத்ததன்றி
வின்மலையாக்குதலென்மிளிர்வேற்கண்விளங்கிழையே. (௰உ)

(இடம்பெற்றுத்தழால்)

வந்தாளுமையர்திருவெங்கைவாணர்வரையணங்கே
நந்தாமணிவிளக்குற்றுதிர்பூவணைநன்கமைந்த
பைந்தாதுகுக்குங்கணியேறுமல்லிகைப்பந்தரிடஞ்
சிந்தாகுலமறநாமிசையோர்மணஞ்செய்வதற்கே. (௰௩)

(வழிபாடுமறுத்தல்.)

அகலாதடைக்கலம்புக்கபுட்காகத்தன்னாகமெல்லர்
மிகலாயரிந்துபுரந்தவற்காத்தவர்வெங்கையிலே
யிகலாதயற்சந்தநம்படர்ந்தேறுமிளங்கொடியே
புகலாயெனக்குயிர்போலுநன்னாணைப்புரந்தருளே. (௰௪)

(இடையூறுகிளத்தல்.)

மதயானையீருரியூடேமறைந்துமழைமறைத்த
வுதையாதிபனெனநின்றார்தம்வெங்கையிலுன்றனைப்போற்
கதையாலெனினுமறிந்திலம்வேள்கலகத்தணங்கே
புதையாதுபைம்பொற்குடங்கதிர்வாளைப்புதைப்பதுவே. (௰௫)

(நீடுநினைந்திரங்கல்.)

சூலக்கரத்தர்திருவெங்கைவாணர்முன்சுட்டமத
னீலக்கணையிற்கைவைத்தானினிச்சற்றுநேரநிற்பிற்
காலற்கிரையிடுமென்னாவியையிந்தக்காரிகையார்
கோலக்களபக்குன்றென்றோமருவக்குறுகுவதே, (௰௬)

(மறுத்தெதிர்கோடல்)

சந்தாபவெந்தழறன்னடியார்க்குத்தணித்தருளுஞ்
செந்தாமரைமலர்த்தாளர்தம்வெங்கைச்செழுஞ்சிலம்பி
னந்தாம்துகையொடுபிறப்பேழுநமைத்தொடர்ந்து
வந்தார்தமைநந்நிறையோவாமன்மறிப்பதுவே. (௰௭)

(வறிதுநகைதோற்றல்.)

புல்லார்பவர்கணெற்சோறுபெற்றாங்குபொருந்தியென்று
மல்லார்மதியநிலவுண்சகோரமருந்தவுங்கல்
வில்லார்திருவெங்கையன்பர்முகாம்புயம்வீறுதவு
நல்லார்வதநமதியிடந்தோன்றுநகைநிலவே. (௰௮)

(முறுவற்குறிப்புணர்தல்,)

தனிவானவர்நந்திருவெங்கைவாணர்தழலெறிப்ப
முனிவானகைசெய்நகைபோல்வதன்றிம்முகின்முலையார்
பனிவாண்மதிமுகத்தேயெனையாளப்பரிவுமாக்
கனிவாயெழுநகையீதம்பிகாமக்கடலினுக்கே. (௰௯)

(முயங்குதலுறுத்தல்)

கொங்கைக்குவடுமணியல்குற்பாம்புங்குறுமுனிவ
னங்கைத்தலமடங்காவிழிவாரியுமாங்கிருப்ப
வெங்கைப்பழமலையாரருளாலவ்விசும்பறியா
மங்கைப்பருவத்திவள்வாயமுதிங்குவாய்த்ததுவே. (௨௰)

(புணர்ச்சியின்மகிழ்தல்.)

தாண்டுஞ்சினவிடையெம்மான்றனிவெங்கைத்தண்சிலம்பில்
யாண்டும்பெறலருமின்பமெல்லாமைம்புலனுமின்று
தூண்டுஞ்சுடரொனநின்றவிம்மாதரிற்றுய்த்தனமால்
வேண்டும்பொருணமக்கேதோவினியிந்தமேதினிக்கே. (௨௧)

(புகழ்தல்.)

புறந்தாழ்குழலுமைபங்காளர்வெங்கைபுரத்தர்வெற்பிற்
குறைந்தாலிவணுதலொவ்வாய்நினதுகுறைநிறைந்தாற்
சிறந்தாயிழைமுகமொவ்வாய்விளங்குஞ்செழுங்கலையா
னிறைந்தாலென்னன்றிக்குறைந்தாலென்னெங்கட்குநீமதியே. (௨௨)

## (வன்புறை)

(அணிந்துழிநாணியதுணர்ந்துதெளிவித்தல்.)

மன்றாடியதிருவெங்கைபுரேசர்மணிவரைமே
னன்றாயணிகுவனென்றாலுநின்பெருநாணையஞ்சிக்
குன்றொதிரொலிபோலநின்பாங்கியர்கோலணியா
வின்றாயிழையணிந்தேன்வெருவேனெஞ்சிளங்கொடியே. (௨௩)

(பெருநயப்புரைத்தல்.)

கடக்கும்பவத்தர்திருவெங்கைவாணர்கநகவெற்பிற்
குடக்குங்குமமுலையாண்மாட்டலாமற்குலவளிகா
ணடக்குங்கமலமுநோக்குங்குவளையுநாணிலவை
யடக்குங்குமுதமுங்கண்டதுண்டோவுங்களாவியிலே. (௨௪)

(தெய்வத்திறம்பேசல்.)

நதிவசத்தாயசடையார்திருவெங்கைநாட்டொருவர்
மதிவசத்தாலன்றிவான்கூன்மதிநுதல்வல்லிசதா
கதிவசத்தால்வரும்வள்ளிதட்போதின்கடிமணம்போல்
விதிவசத்தால்வருநங்கேண்மையாவர்விலக்குவரே. (௨௫)

(பிரியேனென்றல்.)

பாவிடைவைத்தபெரும்புகழ்வெங்கைப்பழமலைகைம்
மாவிடைவைத்தவிகல்வாள்விழியெழின்மாதர்தமை
நாவிடைவைத்தவன்மார்பிடைவைத்தவனணவகப்
பூவிடைவைத்தநினையோபிரிகுவன்பூங்கொடியே. (௨௬)

(பிரிந்துவருகென்றல்.)
உழைதொட்டவங்கையர்வெங்கையர்ஞானவொளியர்வெற்பி
லிழைதொட்டுவிம்மிமலையோடிகலுமிளமுலையாய்
மழைதொட்டுநின்றவிப்பூம்பொழிற்புக்குமணிமகரக்
குழைதொட்டுமீளுநின்கண்போல்விரைந்துகுறுகுவனே. (உஎ)
(இடமணித்தென்றல்.)
சீருக்கயல்விழிமாதேதென்வெங்கைச்செழும்பதியான்
கூறுய்த்திகழ்திருமேனியுமாதுமைகூறுடலும்
வேறுய்ப்புணர்வதென்னேவந்துன்சாரல்வியன்பதியு
மாறுப்பழனத்தெமதூருமொன்றிமருவுதுமே. (உஅ)
(தெளிவு.)
பழிமாற்றியபுகழ்வெங்கைபுரேசர்பணிவரைமேன்
மொழிமாற்றெனும்பொருள்கோளினல்லாமன்மொழிபிறழார்
சுழிமாற்றியவுந்தியாய்வருவேனெனச்சொல்லியவவ்
வழிமாற்றமும்பிறழ்மோபிறழாதுமறப்பினுமே. (உகூ)
(பிரிவுழி மகிழ்ச்சி.)
(செல்லுங்கிழத்திசெலவுகண்டுளத்தொடுசொல்லல்.)
உடையோர்சிறிதொருகைதூக்கிவீசியொருகையினைப்
புடையோடரிக்கணிலனேக்கிச்சிற்றேலிப்பூணுடனே
சடையோர்திருவெங்கைவெற்பினம்மாவிதனிநெஞ்சமே
நடையோதிமங்கள்கண்டென்னேபறக்கநடக்கின்றதே. (கூ0)
(பாகனொடுசொல்லல்.)
பொன்னங்கிரிசிகர்திண்டேர்செலுத்தும்புகழ்வலவா
மின்னஞ்சடையர்திருவெங்கைவாணர்தம்வெள்ளருவித்
தென்னஞ்சிலம்பிலிடைமிடித்தார்தமைத்தேடியெதி
ரன்னம்பிடியெனவேநடந்தேகுநம்மாயிழையே. (கூக)
(பிரிவுழிக்கலங்கல்.)
(ஆய்வெள்ளம்வழிப்படக்கண்டிதுமாயமோவென்றல்.)
ஆயவெள்ளத்திடுவேயிருக்குமரசவன்னம்
பாயவள்ளத்தமுதுற்றுங்கெனக்ககப்பட்டதுதான்
மேயவெள்ளச்சடையெம்மான்றிருவெங்கைவெற்பிலொரு
மாயவெள்ளக்கனவோவறியேனெஞ்சமாழ்குவதே. (கூஉ)
(வாயில்பெற்றுய்தல்.)
சேவையுகைப்பவர்வெங்கைபுரேசர்சிலம்பின்மய
னோவையொழிப்பமருந்துகண்டோமினிநோவனெஞ்சே
பூவையுருத்தமொழியார்மழைக்கட்பொறிவண்டுதான்
பாவையொருத்திமுகாம்புயத்தேசென்றுபாய்கின்றதே. (கூங)

(பண்புபாராட்டல்.)

நிதிமுன்மிடியர்மனம்போலவாவிங்கரில்வெங்கைப்
பதிமுன்புகுமுதுகுன்றுடையார்பதம்பண்டளைத்த
மதிமுன்மனையுமனைநாயகன்முன்மதியுங்கண்டோர்
விதிமுன்னினருமிவர்முகம்போலவியக்கிலரே. (௩௪)

(பயந்தோர்ப்பழிச்சல்.)

செந்தாமரையுமரிமார்புமென்னத்திருமகடா
னந்தாமனையிடையின்றிருந்தாங்கெந்நாளுமுற
வந்தாழ்சடையவர்வெங்கையிலேநமதாவிநிற்ப
வந்தாரமுறிதழ்தந்தாரைத்தந்தவர்வாழியவே. (௩௫)

(கண்படைபெறாதுகங்குனோதல்.)

அரவாம்பணியினர்வெங்கைபுரேசரணியழகின்
வரவாங்கதிரொன்றுறுமோவுடுமொக்குள்வந்தெழவே
விரவாம்புயற்கரவோடவிர்மாமதிவெள்வளைசே
ரிரவாங்கடலில்விழுந்தமிழ்வேனையெடுப்பதற்கே. (௩௬)

(இடந்தலைப்பாடு.)

(தந்ததெய்வந்தருமெனச்சேறல்.)

மின்றந்தவேணியர்வெங்கைபுரேசர்மிகுமருளா
லன்றந்தவாரிநடுவேயொருவனகற்றியிட்ட
பொன்றந்ததெய்வமன்றேமலர்மாலைப்பொழிலிடத்தின்
முன்றந்தின்றுந்தருநெஞ்சமேசெலின்முந்துறவே. (௩௭)

(முந்துறக்காண்டல்.)

அங்கஞ்சுமந்ததிருமார்புடைவெங்கையானருளால்
வங்கஞ்சுமந்தகடற்பிறவாமல்வருமமுதஞ்
சிங்கஞ்சுமந்தகரியுடனேயொண்செழுந்தாளச்
சங்கஞ்சுமந்தசெந்தாமரைதோன்றத்தனிவந்ததே. (௩௮)

(முயங்கல்.)

மடலுமணமுமென்னவேநிறைவெங்கைவாணர்தமைத்
தொடலுமடியர்பெறும்பேறென்னவிவடோண்மருவி
யுடலுமுயிருமநமுமெலாம்வளர்ந்தோங்குமின்பக்
கடலுளமுந்தியவசமுற்றேதையுங்கண்டிலமே. (௩௯)

(புகழ்தல்.)

நாங்குழையாமலருள்வோன்றிருவெங்கைநாயகன்கைத்
தாங்குழையேயன்றிமென்முலைதாங்கித்தளருமிடைப்
பூங்குழையாயெப்படி குதித்தாலுமிப்புல்லறிவாய்
நீங்குழையோநின்மதர்வேனெடுங்கணிகர்ப்பதுவே. (௪0)

(ஆயத்துய்த்தல்.)

வானோக்கிநிற்கும்பைங்கூழ்போலவுமொருமன்னவன்செங்
கோனோக்கிவாழுங்குடிபோலவுந்தடக்கோட்டிமயத்
தேனோக்கிநிற்குமெழிலுடையான்வெங்கைச்செல்வியுனைத்
தானோக்கிநிற்குநல்லாயத்துளேசென்றுசார்ந்தருளே. (சக)

(பாங்கற்கூட்டம்.)

(தலைவன்பாங்கனைச்சார்தல்,)

கன்னியுந்தானுமொன்றானோன்றிருவெங்கைக்கண்ணுதல்போல்
வன்னியுங்காற்றுங்கலந்தேறியவெம்மதனைவெல்லச்
சென்னியுஞ்சேகரமும்போனமக்குச்சிறந்தநண்பன்
மன்னியிங்கோர்துணையாயினல்லாமல்வலியில்லையே. (சஉ)

(பாங்கன்றலைவனையுற்றதுவினாதல்.)

இலங்காபுரிமன்னன்றோளிறவூன்றியவீசர்வெங்கை
யுலங்காதலிக்குந்திண்டோளுரவாகடலூர்ந்திடினும்
விலங்காமறலியொருகோடிதூதொடுமேல்வரினுங்
கலங்காவுளமுங்கலங்கினின்றாயென்னகாரணமே. (சங)

(தலைவனுற்றதுரைத்தல்,)

மலைவன்பணியரிவின்னாண்கணைசெய்துவந்துவெங்கைத்
தலைவன்புரமிரண்டொன்றேவெலவிச்சகமனைத்துஞ்
சிலைவன்குணங்கணைவேழஞ்சுரும்பலர்செய்துவென்றோன்
முலைவண்கிரியுறவந்தநண்பாவொருமொய்குழலே. (சச)

(கற்றறிபாங்கன்கழறல்.)

போதைப்பொதிந்திட்டிருடேங்களகப்பொருப்பிமய
மாதைக்கலந்ததிருவெங்கைவாணர்மதுரைச்சங்க
மேதைப்பசுந்தமிழ்ப்பாற்கடனீந்தியவீரமொரு
பேதைக்குடைந்துநின்றாய்தகுமோசொல்பெருந்தகையே. (சரு)

(கிழவோன்கழற்றெதிர்மறுத்தல்.)

ஊனாமெனநஞ்சுவந்தோன்றிருவெங்கனூரிலுயர்
சேணாமுலகம்வறிதாகவந்தவச்சேயிழையார்
பூணாரமென்முலையின்பெருங்காட்சியும்பொய்யிடையின்
காணாமையுங்கண்டனையாயினண்பகழறிலையே. (சசு)

(கிழவோற்பழித்தல்.)

அண்டாதிபர்நந்திருவெங்கைநாயகர்க்கன்றியொரு
பெண்டாணிதயமுருகினையாயிற்பெருந்தகைநீ
விண்டாரகைகண்டினியிந்துகாந்தமுமெய்யுருகும்
வண்டாமரைகளுமின்மினிதோன்றமலர்ந்திடுமே. (சஎ)

(கிழவோன்வேட்கைதாங்கற்கருமைசாற்றல்.)

பாலார்மொழியுமைபங்காளர்வெங்கையம்பாவைதந்த
மாலாழ்தருமெனைவெவ்வுரையானண்பவாட்டுகின்றாய்
காலாழ்களரினமிழ்ந்தவெங்கோட்டுக்களிற்றையொரு
வேலாலெறிபவர்போலேயிதுவென்விதிவசமே. (சஅ)

(பாங்கன்றன்மனத்தழுங்கல்.)

பெட்டுப்பட்டாவுரிகொண்டோன்றென்வெங்கைப்பிரான்வரையின்
மட்டுப்பட்டாவிமலர்வாரிசமுகவல்லிமுலை
முட்டுப்பட்டானையனையானிடையெனுமோரிழையாற்
கட்டுப்பட்டானினியென்செய்குவேனிந்தக்காசினிக்கே. (சகூ)

(தலைவனோடழுங்கல்.)

நாட்டுமலிபுகழ்ப்பெம்மான்றிருவெங்கைநாட்டிறைவ
கோட்டுவரிவிற்கொலைவேடர்தந்தகொடியிடையாள்
பூட்டுமயற்றொடர்நீயேபடினெவர்போக்குறுவார்
காட்டுமிரவிக்கிரவியுண்டோவிருள்காய்வதற்கே. (ருய)

(எவ்விடத்தெவ்வியற்றென்றல்.)

தழைந்தார்மலிசடையீசர்தம்மாதின்றடமுலைக்குக்
குழைந்தார்திருவெங்கைநாயகனாரிடங்கொண்டுதனி
விழைந்தார்நினதகத்திற்றிட்டிவாயிடைவேழமொடு
நுழைந்தாரிடமியலெல்லாமிறைவநுவன்றருளே. (ருக)

(அவணஃதிவ்விடத்திவ்வியற்றென்றல்.)

நறையேயிதழிபுனைவார்திருவெங்கைநாதர்சடைப்
பிறையேநுதலவர்மானேகருங்கண்பிடித்ததுடிப்
பறையேயிடையணிபாம்பேபகலல்குல்பற்றுமலை
யிறையேமுலைமலர்த்தண்டலையேயிடமென்னுயிர்க்கே. (ருஉ)

(பாங்கனிறைவனைத்தேற்றல்.)

தடங்கொண்டகண்ணியிடத்தார்திருவெங்கைத்தண்டலையை
யிடங்கொண்டுகாமப்புனனீந்திநீகரையேறுதற்குக்
குடங்கொண்டுநின்றவொருமாதைக்கண்டுகுறுகுமட்டுந்
திடங்கொண்டுநெஞ்சந்தளராதுநிற்றிதிறலவனே. (ருங)

(குறிவழிச்சேறல்.)

காவியுமாம்பலும்பூத்தசெந்தாமரைகண்டளிகள்
வாவியுமோடையும்விட்டெய்தவேபொழில்வாய்நிற்குமோ
தேவியுமானும்விளையாடிடத்தார்திருவெங்கையி
லாவியுமாருயிரும்போன்றிறைகண்டவாயிழையே. (ருச)

(இறைவியைக்காண்டல்.)
முகையேமுலைசெழும்போதேமுகமலர்மூசுவண்டின்
றொகையேகுழல்செந்தளிரேயடிநற்சுவைக்கனியே
நகையேயிதழ்திருவெங்கைபுரேசர்கைந்நவ்விமிகும்.
பகையேயெனுங்கணிவரோயிறைசொன்னபைங்கொடியே. (௫௫)

(இகழ்ந்ததற்கிரங்கல்.)
புடையேயுமையொடுஞ்செங்கதிர்வேற்கைப்புதல்வனொடும்
விடையேயிவர்தரும்பெம்மான்றிருவெங்கைவெற்பிலனனப்
பெடையேயெனவந்திளங்காவுறுமிப்பெருந்தநத்தா
ரிடையேயிலையெனினைந்திளையான்கொலிறையவனே, (௫௬)

(தலைவனைவியத்தல்.)
சூடும்பிறையர்திருவெங்கைவாணர்சுடர்க்கிரிமேற்
பாடுங்கவியுளடங்காக்கவினுடைப்பாவையன்றோர்
கூடுங்குவிமுலைக்குன்றுங்கண்வேலையுங்கூந்தனொடுங்
காடுங்கடந்துவந்தான்மிகவீரனங்காவலனே. (௫௭)

(தலைவியைவியத்தல்.)
பருத்தகுவிமுலைப்பாரத்தினாற்கடற்பங்கயத்தி
லிருத்தலரிதெனவந்துவன்பூவிலிருக்குமிவர்
விருத்தகிரிமகிழ்வெங்கைவெற்போன்மயல்வெள்ளங்கொண்டு
வருத்தவிதயமலர்மீதிருந்திடவல்லவரோ, (௫௮)

(தலைவன்றனக்குத்தலைவிநிலைகூறல்.)
இயலாற்சிறந்ததிருவெங்கைவாணரிமயவெற்ப
மயலாற்புரிந்தமுலையானையின்முன்மதர்மழைக்கட்
கயலாற்கலக்கிவித்துன்கலைவேலையைக்காரளகப்
புயலாற்பருகிவித்தார்நின்றுளார்தண்பொழிலிடத்தே, (௫௯)

(தலைவன்சேறல்.)
ஏழாமுலகும்புகழ்வெங்கைவாணரிமயவெற்பி
லாழாதெனைநெடுங்காமக்கடனின்றணைத்தெடுப்பார்
தாழாதிசையளிமூசுமென்பூந்துணர்த்தண்கொம்பரே
சூழாயமாகநடுநிற்பரோவிந்தச்சோலையிலே. (௬௰)

(தலைவியைக்காண்டல்.)
தளைப்பாசநாசகர்வெங்கைபுரேசர்தடஞ்சிலம்பிற்
களைப்பான்மதிமுகக்காரிகையீர்தன்களபமுலைக்
கிளைப்பாரமென்பெருந்தோண்மேலிருத்திநைகின்றவிடைக்
கிளைப்பாறவோதனிநின்றீரிக்காமரிளம்பொழிற்கே. (௬௧)

# பாங்கற்கூட்டம்.

(கலவியின்மகிழ்தல்.)

துதிவாய்தொறுங்கொளுமென்மலர்ப்பூம்பொழில்சூழ்ந்தவெங்கைப்
பதிவாய்வரையிளமானோடமர்ந்தபரனருளாற்
றிதிவாய்மதியமிர்தம்போலலாமற்சிறந்தமுக
மதிவாயமிர்தமுண்டோம்வந்துகூடவிம்மங்கையரே. (௯௨)

(புகழ்தல்.)

சங்கந்துறந்தன்னமில்லாமலேயொருதாளினின்று
பொங்கம்புனலிற்றவம்புரிந்தாலும்புனைகுவிரோ
வங்கம்பலவணிந்தார்வெங்கைவாணரணிவரைமே
லிங்கம்புயமுகைகாளிந்தமாதரிளமுலைக்கே. (௯௩)

(பாங்கியொடுவருகெனப்பகர்தல்.)

பங்கேருகத்திற்கடுத்தசெங்காவிப்பணிமலர்போ
னுங்கேளெனுமுயிர்ப்பாங்கியொடேமறைநான்முகத்திற்
சங்கேதமாம்பெயர்வெங்கைபுரேசர்தடஞ்சிலம்பி
லிங்கேவருகவென்னெஞ்சாலயத்திலிருப்பவரே. (௯௪)

(பாங்கியிற்கூட்டல்.)

கார்கண்டமஞ்ஞையுஞ்செந்தேனிரம்பக்கடைதிறக்குந்
தார்கண்டவண்டுந்திருவெங்கைநாயகர்தாண்மலரின்
சீர்கண்டவன்பரும்போலேநிற்கண்டுசிறக்குமுளப்
பேர்கண்டவேற்கண்மடவாரைமேவுகபூங்கொடியே. (௯௫)

(பாங்கிமதியுடன்பாடு.)

(தோற்றத்தாலாராய்தல்.)

எனையாடியபதத்தாள்வோன்றிருவெங்கையேந்திழைநீ
சினையாடியமணிப்பொன்னூசலாடிச்செழுங்குவளைச்
சுனையாடிவண்டல்விளையாடிமுத்தந்துவன்றியவம்
பனையாடிவந்தனையோதிருமேனிவருந்தியதே. (௯௬)

(ஒழுக்கத்தாலையந்தீர்தல்.)

கொற்றிக்கிசைந்தபுயத்தார்திருவெங்கைக்கோமளமே
நெற்றிக்குடைந்ததென்றெள்ளப்படாதந்தநெற்றியின்மேல்
வெற்றிக்கமலக்கரங்குவித்தேயின்றுவிண்ணினெழு
மற்றிப்பிறைத்தெய்வங்கந்நியர்யாரும்வணங்குவதே. (௯௭)

(சுனைநயப்புரைத்தல்.)

கடைக்கண்சிவந்திதழொன்றேவெளுப்பக்கலவியினு
ளிடைக்கண்மெலிவுதருங்கொங்கைமேலதுவேயழிய
விடைக்கண்விரும்பியுறைவார்திருவெங்கைவெற்பிடத்திற்
றொடைக்கண்மலர்க்குழலாய்சுனையாதினுட்டோய்ந்தனையே. (௯௮)

(சுனையயந்துரைத்தல்.)

ஒளியார்குமுத்நல்வெள்ளாம்பலாகவொழிவறுதண்
ணளியார்கருநெய்தல்வந்துசெந்தாமரையாகச்செய்யி
லெளியாரடியவர்க்கானார்தம்வெங்கையில்யாரொருவர்
குளியார்மதிநுதனீயாடியவக்குளிர்சுனையே. (சுசு)

(தகையணங்குறுத்தல்.)

பண்ணூடுமின்சொலுமைபாகர்வெங்கைப்பனிவரைமேல்
விண்ணூடிழிந்துவருந்தெய்வமாதுவிளங்குறுமென்
கண்ணூடிருந்தபெண்ணின்னீழலாகக்கருத்திடைநீ
யெண்ணூடிருந்துகவேலிவடானெங்களேந்திழையே. (எ0)

(நடுங்கநாட்டம்.)

எதிராக்கவினுமைபங்காளர்வெங்கையிறைவர்சடை
முதிராப்பிறையயந்தலைநாகமீன்றமுழுமணியின்
கதிராற்சிவந்ததுபோற்சேந்தகோட்டுக்களிற்றைமல
ருதிராக்கொடியனையாயின்றுநான்கண்டுடைந்தனனே. (எக)

(பெட்டவாயில்பெற்றிரவுவலியுறுத்தல்.)

அருவாயுருவமுமாம்வெங்கைவாணரரும்பதத்தைக்
குருவாலடைபவர்போலுயிர்ப்பாங்கியைக்கொண்டுமெல்லப்
பெருவாரறநிமிர்ந்தோர்நூன்மருங்குற்பெரும்பழியை
வெருவாதெழுமுலைப்பெண்ணாரமுதத்தைமேவுதுமே. (எஉ)

(ஊர்வினாதல்.)

வலைநடுவெந்தவிளங்கலைபோனும்மணிவடந்தாழ்
முலைநம்வென்னவிடமறவேவந்துமுட்டுமிரு
மலைநடுவந்துகொந்தேனுரையீர்நும்வளம்பதியா
தலைநடுவெந்தநஞ்சுண்டபிரான்வெங்கையன்னவரே. (எங)

(பெயர்வினாதல்.)

ஊரானதிங்குரையீராயினுமென்னுளங்குளிரச்
சீரார்திருவெங்கைமாநகரார்தந்திருப்பெயர்போற்
பாராரபருவங்கள்ளேமறையாகப்பகர்வதன்றே
பேராயினுமுரையீர்பிறைவாணுதற்பேதையரே. (எச)

(கெடுதிவினாதல்.)

பைங்காஞ்சநவரைவில்லாளர்வெங்கைப்பணிவரைமேற்
செங்காந்தளன்னமென்கைம்மடவீர்செங்குருதிபொங்க
வங்காந்தன்பகுவாய்போலவேல்பட்டமுந்துபுண்ணோ
டிங்காம்புனத்தயல்வந்ததுண்டோநல்லிளங்களிறே. (எரு)

(ஒழிந்தது வினுதல்.)

விழித்தேமதனைப்பொடித்தார்செவ்வாம்பன்மிஞிறுவப்பச்
சுழித்தேனுமிழ்வயல்வெங்கையிலேகடற்றேரட்டலரை
யொழித்தேவருமடவீரளியேனின்றுளம்வருந்த
மொழித்தேனிலாததென்னேவுங்கள்வாய்க்குமுதமலர்க்கே. (எசு)

(யாரோயிவர்மனத்தெண்ணம்யாதெனத்தேர்தல்.)

ஊரோதென்பாரதைவிட்டேயருகுவந்தும்முடைய
பேரோதென்பார்கரிகண்டதுண்டோவெனப்பேசிநின்று
வாரோறுகொங்கைக்குடநோக்குவார்வெங்கைவாணர்வெற்பி
லாரோயிவர்மனத்தெண்ணமென்னேயென்றறிந்திலமே. (எஎ)

(எண்ணந்தெளிதல்.)

ஊர்கேட்கவுநம்பெயர்கேட்கவுநின்றுழல்பனேக்கைக்
கார்கேட்கவும்வந்தவரோயலரிவர்கங்கியுமை
சீர்கேட்குமையர்தென்வெங்கையிலேயிவள்செய்யவிள
நீர்கேட்கவந்தவரோபற்றுகாமநெருப்பினுக்கே. (எஅ)

(தலைவன்கையுறையேந்திவருதல்.)

கொடையாளர்கையிற்பொருள்போற்சிறுமென்கொடிபுரையு
மிடையாளிகுளையுடனிருந்தாளினியேதுகுறை
விடையானிணையிலிவெங்கைப்பிரான்றன்விழிக்குடைந்தோன்
படையான்மெலிந்தவெல்லாநெஞ்சமேமுன்பகருதுமே. (எகூ)

(தலைவனைவ்வகைவினுதல்.)

கானைக்கலையொன்றெனதம்புபாயக்கலைமதியின்
மானைப்புணரவெழல்போலவேதுள்ளிவந்ததுண்டோ
வானைத்தலைமகற்பொற்றேன்றிருவெங்கையாவியிள
மீனைப்பொருதகன்றேள்வாளிகலும்விழியவரோ. (அய)

(எதிர்மொழிகொடுத்தல்.)

மானக்கலைகளெட்டெட்டும்வல்லீர்கொன்றைவார்சடையிற்
கூனற்பிறைபுனையெம்மான்றென்வெங்கைக்கொடிச்சியரோ
மேனற்புனத்திற்கிளிபார்த்திதணினிருப்பதன்றிக்
கானக்கலையைத்தனிப்பார்த்திருக்குங்கருத்திலமே. (அக)

(இறைவனைநகுதல்.)

தேனனையாவருமாமலரால்சிலைமதவேண்
மானனையாரைவருத்துமென்பாரின்றுமாந்தழையாற்
கூனனையாமதிவார்சடையார்வெங்கைக்குன்றில்விழி
மீனனையாயிவரெய்தார்பெருங்கலைவீழ்ந்திடவே. (அஉ)

(பாங்கிமதியினவரவர்மநக்கருத்துணர்தல்.)

மான்வேட்டமீதுபுனங்காவன்மீதினும்வைத்தமநந்
தான்வேட்டகாதன்மறைப்பவெல்லாமயன்றுதையொடு
நான்வேட்டசெம்மலர்த்தாளான்றிருவெங்கைநாட்டிலிவர்
தேன்வேட்டபூங்கண்களேயலர்தூற்றித்தெரிவிக்குமே. (௮௩)

(பாங்கியிற்கூட்டம்.)

(தலைவனுட்கோள்சாற்றல்.)

நற்றேமொழியுமைபங்கன்றிருவெங்கைநாடனையீர்
முற்றேரிழைமுலைமேநகையாதியர்முற்றுநுங்கள்
குற்றேவல்செய்யுமடந்தையராகக்கொடுப்பனின்னே
சற்றேயருட்கடைக்கண்பார்த்தென்னுயிரைத்தாங்குமினே. (௮௪)

(பாங்கிகுலமுறைகிளத்தல்.)

பொய்ம்மேவரும்புனங்காவலர்யாங்கள்புனநடுவின்
வய்ம்மேவுறுமதுகாப்பவணீவளைசூழ்வதெம்மூர்
நம்மேலருள்வைத்தளிப்பார்திருவெங்கைநாட்டிலுன்னூர்
கும்மேல்வரும்வளைசெய்காட்டுவதொண்குலோத்துங்கனே. (௮௫)

(தலைவன்றலைவியையுயர்த்தல்.)

அலைமகளன்னவிலங்கிலைவேற்கணரிவைநல்வாய்
கலைமகள்வந்தனைசெய்வெங்கைநாதற்குக்கைகொடுத்து
மலைமகளண்டமுழுதாளினுங்கண்மலையனையன்.
றலைமகணன்மைப்பெருமையையாதென்றுசாற்றுவனே. (௮௬)

(பாங்கியறியாள்போன்றுவினாதல்.)

இஞ்சிப்புரமொருமூன்றெரித்தார்வெங்கையீர்ம்பொழில்வாய்ப்
பஞ்சிற்சிறுதளிர்மெல்லடிமாதர்பலரினுந்தான்
வஞ்சித்தெமையெம்முடனேயிருப்பினும்வந்துனது
நெஞ்சிற்புகுந்துமறைந்தவள்யார்சொனெடுந்தகையே. (௮௭)

(இறையோனிறைவிதன்மையியம்பல்.)

போதேமுகமிளஞ்சேலேவிழிபசும்பொன்னுரைத்த
சூதேமுலைசெந்தளிரேயடிகதிர்ச்சோதியொடு
வாதேபுரியுந்திருமேனியர்வெங்கைமங்கையர்க்கு
மாதேயிடையொன்றுமல்லாமற்பொய்யல்லமற்றவையே. (௮௮)

(பாங்கிதலைவியருமைசாற்றல்.)

ஒறுத்துப்புரஞ்சுடுமெய்மான்றிருவெங்கனூரின்மலர்
பொறுத்துக்கொளும்பொனென்றெண்ணேலிராசிப்புறத்துலையாற்
கறுத்தித்தழைந்தகுழலோடுகொங்கைக்கநத்தசொம்பொ
னிறுத்துக்கொளும்பொனன்றேவெளிதோசொனெடுந்தகையே (௮௯)

(தலைவனின்றியமையாமையியம்பல்.)
பொங்குழொளிதிகழ்வெங்கைபுரேசர்பொருப்பிடத்தில்
வங்குழ்வழங்கும்வியன்ஞாலந்தன்னில்வளர்ந்தெழுந்த
பைங்கூழ்புயலின்றமையாதவாறெனப்பாவைநல்லா
யிங்கூழ்தருமென்கொடியன்றிவாழ்தலின்றென்னுயிரே. (௯௰)

(பாங்கிநின்குறைநீயேசென்றுரையென்றல்.)
தீயேனுளங்குடிகொள்வெங்கைவாணர்செழுஞ்சிலம்பில்
வீயேறுமென்றொடைத்தோளன்னலேயயல்வேறொருவர்
போயேயுரைப்பின்மநமிரங்காளெங்கள்பூங்கொடிக்கு
நீயேவணங்கிமநமுரைநீங்கோதுகநின்குறையே. (௯௧)

(பாங்கியைத்தலைவன்பழித்தல்.)
கல்லைக்குழைத்துப்பயின்றுளதாகியகல்வியுடைத்
தில்லைப்பதியினடமாடும்வெங்கைச்சிவனையல்லாற்
சொல்லைக்கொடுநின்மநநாக்குழைப்பத்துணிதலொரு
புல்லைக்கொடுதண்கடனீந்தவுன்னுதல்பூங்கொடியே. (௯௨)

(பாங்கிபேதைமையூட்டல்.)
மானைக்கவர்வம்மழுவிலையேல்வெங்கைவாணர்க்கந்த
வானைப்புணர்மதிகீள்வேமகப்படின்மானுக்கென்னுஞ்
சேனைக்குறவர்மகளாகியவித்திருந்திழையா
ளானைத்திறலுடையாயறியாளுன்னருந்துயரே. (௯௩)

(காதலன்றலைவிழுதறிவுடைமைமொழிதல்.)
விடுத்தமயலுடையெம்மான்றிருவெங்கைவெற்பனாங்கே
யெடுத்தவிடைமுறிக்குங்கொங்கையேயன்றியென்னையெய்யத்
தொடுத்தகுவளைக்கணைவாங்கிவின்மதன்றாணியிட
வடுத்தகடைக்கண்வைத்தாரறியாமையறிந்திலரோ. (௯௪)

(பாங்கிமுன்னுறுபுணர்ச்சிமுறையுறக்கூறல்.)
மருவீரவெண்மதிவேணிப்பிரான்வெங்கைவான்பொழில்வா
யிருவீருமொத்துப்புணர்ந்தாற்பயனுமக்கென்னையொன்னூர்
பொருவீரவாள்விழிக்காப்பதிஞயிரம்பொய்யுரைத்து
வருவீரறிந்திலரோவுலகோதும்வழக்குனையே. (௯௫)

(தன்னிலைதலைவன்சாற்றல்.)
மண்ணைக்கொண்டுண்டபெருமான்றொழும்வெங்கைவாணர்வெற்பிற்
பண்ணைக்கொண்டுற்றமொழியாயுனையன்றிப்பாரமுலைப்
பெண்ணைக்கொண்டின்பம்பெறநான்விரும்பப்பெறிலதுதான்
கண்ணைக்கொண்டன்றிவழிதானடப்பக்கருதுதலே. (௯௬)

(பாங்கியுலகியலுரைத்தல்.)

வெண்டாமரைமுலைப்பாலிகைவாளரவிந்தச்செந்தீ
கொண்டாவியிற்சங்கமார்ப்பக்குவளைமணம்புணர்ந்து
வண்டாடுநெல்லியலூரவெம்மான்வெங்கைமாதினைநீ
கண்டாசைப்பட்டனையேவரைந்தேகொள்கடைப்பிடித்தே. (௬௭)

(தலைமகன்மறுத்தல்.)

தாமக்குழலைவரைந்துகொண்டேவெங்கைத்தாணுவெற்பிற்
காமக்கனலைத்தணிப்பாயென்றேநியகாரிகைநீ
நாமக்கிணறகழ்ந்தநீர்கொடுநன்னகரிற்பற்றி
வேமக்கனலையவிப்பாயென்பார்களின்வேறல்லையே. (௬௮)

(பாங்கியச்சுறுத்தல்,)

பால்கொண்டவத்தியெனவேயுடல்வடுப்பட்டவெமர்
வேல்கொண்டதம்முடற்புண்ணிலிட்டேவளைவேணிமிர்ப்பார்
சேல்கொண்டகண்ணியிடத்தார்திருவெங்கைச்சேயிழைக்கு
மால்கொண்டுநின்றுழமேல்விளைந்தேகுகமன்னவனே. (௬௯

(தலைவன்கையுறைபுகழ்தல்.)

கொண்டலங்கண்டர்திருவெங்கைவாணர்குளிர்சிலம்பிற்
றண்டளிர்வென்றசெந்தாண்மடவீர்நுந்தடமுலையா
முண்டகமென்முகைமேல்வாழவூசிமுனையினின்று
வண்டவஞ்செய்திங்குவந்தகண்டீரிம்மணிவடமே. (௭௰)

(பாங்கிகையுறைமறுத்தல்.)

மல்லார்க்குந்தோளண்ணலேவெங்கைவாணர்வரையிற்பெண்க
ளெல்லார்க்கும்வந்தவிடைபோல்வதன்றிங்கிவட்கன்றியே
வில்லார்க்குநின்னணிகொங்கையிற்காணிலெம்வேடரொன்னும்
பொல்லார்க்குறங்கும்புலிவாயிடறுதல்போன்றிடுமே. (௭௧)

(ஆற்றாநெஞ்சினோடுவன்புலத்தல்.)

பாமாலைகொண்டதிருவெங்கைவாணர்பனிவரைமேன்
மாமாலைநண்ணியவென்னெஞ்சமேயிவ்வரியளிக
டாமாலைமென்குழலார்தமைவேண்டிநந்தாண்முறிந்த
பூமாலையேறுங்கொலோவவர்வார்முலைப்பொற்குன்றமே. (௭௨

(பாங்கியாற்றுவித்தகற்றல்.)

ஆனுக்களித்தகொடியாளர்வெங்கையணிநகராய்
பாநுக்களித்துவருங்காலைநீவரிற்பைந்தொடிக்கைத்
தேனுக்களிக்குமலர்த்தொடைவார்குழற்றேமொழியெம்
மானுக்களித்துக்கலைசாக்குவனுன்கைவண்டழையே. (௭௩)

பாகநிலப்பிறைவாணுதலாடன்பரவையல்குற்
போகநிலத்திலிட்டாளையனேயுன்கைப்பூந்தழையே. (௱௰அ)

(கிழவோனாற்றல்.)

வன்மொழிபோலவுரைத்தவெல்லாமிந்தமங்கைநல்லா
ளின்மொழியேமநத்தன்புவிடாமலிசைத்தமையான்
மென்மொழிவாய்மைத்திருத்தொண்டர்தாமுணம்விட்டெறிந்த
கன்மொழிமாமலரன்றேதிருவெங்கைக்கண்ணுதற்கே. (௱௰கூ)

{ இறைவன்றனக்குக்குறைநேர்பாங்கி
யிறைவிக்கவன்குறையுணர்த்தல். }

வத்திரமைந்துடையார்வெங்கைவாணர்வரையணங்கைப்
பத்திரங்கொண்டரிச்சித்தேவாங்கொளும்பான்மையரா
யொத்திரங்குள்ளமொடுபூந்தழைக்கையொருவரின்று
சித்திரமொன்றனையாயடைந்தார்நந்திருப்புனத்தே. (௱உ௰)

(இறைவியறியாள்போன்றுகுறியாள்கூறல்.)

வேலுக்குமம்புக்குமாறுகொண்டோடும்விழிமடவாய்
மாலுக்குநன்மனையாண்மனையாகிவழங்கும்வல்ல
கோலுக்குவல்லவண்ணமலையார்கட்டுகோயிலகப்
பாலுக்குவந்ததுகண்டாய்நம்வெங்கைப்பழமலையே. (௱உக)

(பாங்கியிறையோற்கண்டமைபகர்தல்.)

போரையும்வேளையுமாற்றித்தன்வெங்கையிற்போதக்கண்டேன்
வாரையுநின்பெருங்கொங்கையின்மேன்மநம்வைத்திருண்ட
காரையுஞ்சீறுமலர்க்குழலாய்கரியுங்கிரியும்
பேரையுஞ்சீரையுங்கேட்டுமுன்போந்தபெருந்தகையே. (௱உஉ)

(பாங்கியைத்தலைவிமறைத்தல்,)

நாரணனுன்முகன்காணார்சதாநந்தர்ஞானபரி
பூரணர்வெங்கைப்பழமலைவாணர்பொருப்பின்மலர்த்
தாரணிவார்குழலாய்நிந்தைகூறத்தகாதுகண்டாய்
காரணமின்றிக்கலுழ்வாரொருவரைக்கண்டுகொண்டே. (௱உ௩)

(பாங்கியென்னைமறைப்பதென்னெனத்தழால்.)

மேலிலையென்னவுயர்ந்தார்திருவெங்கைவெற்பிலுள
மாலிலையென்னவெனைமறைத்தாய்திருமாலுறங்கு
மாலிலையன்னவயிற்றணங்கேயருந்தாய்க்கொளித்த
சூலிலைநெஞ்சறியாவஞ்சகமிலைச்சொல்லுதற்கே. (௱உச)

(பாங்கிகையுறைபுகழ்தல்.)

நீரையணியுந்திருச்சடையார்வெங்கைநித்தர்வெற்பிற்
றூரையணியுமதன்றேர்கண்டம்மதழைத்ததுகாண்
வாரையணியுமுகிண்முலையாயணிவாய்த்தவல்குற்
றேரையணியுந்தகுதியதாமிந்தச்செந்தழையே. (௱உ௫)

(தோழிகிழவோன்றுயர்கிலைகிளத்தல்.)
வளங்கனிவெங்கைப்பழமலைவாணர்வரையினவ
ருளங்கனிவெண்மருப்போர்மதயானையொளிர்நுதலாய்
களங்கனியன்னமடப்பிடிவாயிற்கனிந்துவிழும்
விளங்கனிநல்கக்கண்டானரலைதுண்விளங்கனியே. (௱௨௬)
(மறுத்தற்கருமைமாட்டல்.)
நந்தாவொளியர்திருவெங்கைநாட்டினமக்களிப்பச்
சந்தாடவியுளிறைவர்கொய்யாய்ப்பைந்தழையுமில்லை
முந்தாவவர்க்கெதிர்நானுரையாப்பொய்ம்மொழியுமில்லை
வந்தாலினியெனக்கில்லைபெண்ணேயொருவார்த்தையுமே. (௱௨௭)
(தலைவன்குறிப்புவேறாகநெறிப்படக்கூறல்.)
போருடையானுடையார்வெங்கைவாணர்பொருப்பின்மணித்
தேருடையார்கருத்தேதோவறிந்திலந்தேமொழியா
யாருடையானினும்வேம்புடையானினுமையபனைத்
தாருடையானலனோமதிமானெனச்சாற்றினரே. (௱௨௮)
(தோழிதலைவியைமுனிதல்.)
மறியேறியகைத்திருவெங்கைவாணர்மணிவரையேற்
சிறியேனம்மெய்களிரண்டினும்வாழ்ந்திடுஞ்செய்யவுயி
றெறியேரயில்விழியாயின்றுகாறுமிரண்டென்பதை
யறியேனறிந்தனனேலுரையேனிவ்வடாதனவே. (௱௨௯)
(தலைவிபாங்கியைமுனிதல்.)
நாட்டுமலிபுகழ்வெங்கைபுரேசர்நயந்துகதி
காட்டும்மலரருளான்முன்றெய்வங்கடைப்பிடித்துக்
கூட்டுமொருவனைத்தானேநடுநின்றுகூட்டுதல்போ
லீட்டுமொழிகள்பலபகர்ந்தாளிவட்கென்சொல்வதே. (௱௩0)
(தலைவிகையுறையேற்றல்.)
பலர்செய்தமன்றுதியாயினுங்கொச்சையம்பாலன்முதற்
சிலர்செய்தவின்றமிழிச்சையினார்திருவெங்கையன்னா
யலர்செய்துநிற்பதொன்றாயினுமாகவநங்கனெய்யு
மலர்செய்தநோய்மருந்தாமாயினல்குகமாந்தழையே. (௱௩௧)
(இறைவிகையுறையேற்றமைபாங்கியிறைவற்குணர்த்தல்.)
இளைத்துப்பொருகங்கைவேணியர்வெங்கையிறைதழையென்
றுளைத்துக்கொடுத்தலுமோடிவந்தேற்றதுயிர்த்துமுத்த
நிளைத்துக்கிடக்குமுலைமேலழித்தினணேரிழைதா
னளைத்துக்குடித்திலளன்பசெய்யாததுமவ்வளவே. (௱௩௨)
(பாங்கிதலைமகற்குக்குறியிடங்கூறல்.)
அகலிலிருக்குஞ்சுடரொளவெங்கையகத்திருக்கும்
புகலிலிருக்கும்பொருளனையார்தம்பொருப்பருகே

யிகலிலிருக்குங்கதிர்வேலிறைவவிரவுகடும்
பகலிலிருக்கும்பொழில்பகல்பாங்கள்பயிலிடமே. (௱௩௩)

(பாங்கிகுறியிடத்திறைவியைக்கொண்டுசேறல்.)

புணர்பூத்தவார்முலையாய்மலர்தாங்கொய்யப்போதுவமந்
தணர்பூத்தசொன்மலர்வெங்கைபுரேசர்தடஞ்சிலம்பி
லிணர்பூத்தகண்கவர்வண்டிசைகூருமிளங்கொடிப்பெண்
டுணர்பூத்தகொம்பர்க்கொழுநனொடாடியசோலையிலே. (௱௩௪)

(பாங்கிதலைமகளைக்குறியிடத்துய்த்துநீங்கல்.)

மானேநின்கண்ணிகல்பெற்றுளவாவிமருவலரை
யானேயளியினம்பின்றொடர்ந்தார்ப்பக்கொண்டிங்குறுவே
னானேறுடையர்திருவெங்கைவாணரருண்முருகன்
றானேமுறுமயிலாடல்கண்டேநிற்கத்தன்பொழிற்கே. (௱௩௫)

(இறைவியிறையோனிடத்தெதிர்ப்படுதல்.)

இயலோடுமல்குந்திருவெங்கைவாணரிமயவெற்பிற்
கயலோடும்வள்ளைக்கொடியோடுமோர்பைங்கமுகணங்கும்
புயலோடுநல்லிளநீரோடுநின்றுபுடைபெயருஞ்
செயலோடுநிற்பவிங்கின்றுகண்டேனொருதீங்கரும்பே. (௱௩௬)

(புணர்ச்சியின்மகிழ்தல்.)

மற்றின்பமுண்டென்பதன்றாலிவடரவந்தவின்பஞ்
சிற்றின்பமென்பதுதென்வெங்கைவாணர்திருநடந
முற்றின்பஞ்செய்யுஞ்சிதாகாசந்தன்னையுணர்வுடைமை
பெற்றின்பமெய்தினர்சொல்வர்சிற்றம்பலப்பேர்புனைந்தே. (௱௩௭)

(புகழ்தல்.)

வெங்கைப்பழமலையெம்மானுழையும்விளங்குமவன்
பங்கைப்பெறுமுமைசெங்காவியுமவள்பாலனொரு
செங்கைக்கதிர்வடிவேலுந்தரிப்பதுசெப்பிலிந்தக்
கொங்கைக்குடமுடையாள்விழிகாட்டுங்குறிப்பதுவே. (௱௩௮)

(தலைமகளைத்தலைமகன்விடுத்தல்.)

நீயாவிவந்தளித்தாய்தமியேற்குநிலாமலினிப்
போயாவிநல்குநிற்காணுதலமரும்பூவையர்க்கு
மாயாவிநோதர்திருவெங்கைவாணர்வரையினெதிர்
கூயாவிமேன்மலர்கொய்துநின்றாடுககோமளமே. (௱௩௯)

(பாங்கிதலைவியைச்சார்ந்துகையுறைகாட்டல்)

நஞ்சமமுதுசெய்வெங்கைபுரேசர்நன்னாடனையா
யஞ்சமுறவளியெல்லாமடக்கியமுதவொளி
விஞ்சுமதிகண்டிதண்மூட்டியோகம்விளைத்தசனாற்
கஞ்சமிதுமுகசாரூபம்பெற்றதுகைக்கொள்கவே. (௱௪௰)

(தலைவியைப்பாங்கிற்கூட்டல்.)
கங்கைவிழியுமுகமுஞ்செவ்வாயுங்கரந்துமைக்குச்
செங்கயலுஞ்செங்கமலமுமாம்பலுஞ்செப்புமவர்
வெங்கையனையவிலங்கிலைவேற்கண்விளங்கிழையாய்
மங்கையரையடைந்தம்மனையாடுகவந்தருளே. (௱சக)

(நீங்கித்தலைவற்கோம்படைசாற்றல்.)
பிறவாவடிவன்றிருவெங்கைமேவும்பிரானொடுபோ
யுறவாருயிருறவேயாக்குஞ்சத்தியையொப்பவின்று
குறவாணர்தங்கண்மடமாதைநின்னொடுகூட்டுமெனை
மறவாதிருமன்னவாவிதுவேநல்வரமெனக்கே. (௱சஉ)

(உலகியன்மேம்படவிருந்துவிலக்கல்.)
மாயற்கரியர்திருவெங்கைவாணர்மணிவரைமே
லியற்பொரியுங்குறம்பூழ்க்குழம்புட்டேனமெல்லூன்
றீயற்கரியுந்தினைமூரலுமெஞ்சிறுகுடில்வாய்
நேயத்திவண்மிசைந்தேகிலென்னுகுநெடுந்தகையே. (௱சங)

(விருந்திறைவிரும்பல்.)
நானக்களபமுலையீரெனக்குநவில்வதென்னீர்
வானத்தவர்தொழுதேத்துஞ்சீர்வெங்கைவாணர்க்குங்கள்
கானக்குறவரிறைமகன்றன்முனங்கல்லையிற்பெய்
யேனத்தசைக்கறியன்றேமிகவுமினியதுவே. (௱சச)

(ஒருசார்பகற்குறி.)

(கிழவோன்பிரிந்துழிக்கிழத்திமாலையம்பொழுதுகண்டிரங்கல்.)
நந்தாமதுகைப்பழமலைபார்வெங்காடனையாய்
வந்தாவியம்புயம்வாட்டுமுன்னாளிலம்மாலையன்று
சிந்தாகுலமுறவேதனித்தாரைச்செறுக்குமதன்
செந்தாமரையைமலர்த்துமிம்மாலைசிறுபொழுதே. (௱சரு)

(பாங்கிபுலம்பல்.)
அருந்தாவிடமுமருந்தியவ்வானவராருயிரைத்
தருந்தாருவெங்கையிலெவ்வகையானுந்தனைத்தப்பியே
யிருந்தாலுமாவிகவர்வான்மதிப்பிள்ளையீன்றுவைக்கும்
பெருந்தாபமாலைக்கிவளென்கொலோபிழைசெய்ததுவே. (௱சசு)

(தலைவனிடத்தலைவிவருந்தல்.)
சுருமுன்படுந்துயர்தீர்ப்பார்நற்கட்செவிக்கங்கணவீ
றிருமுன்கரமுடையார்வெங்கைவாணரிமயவெற்பி
லருமுன்மணியும்புனைபூந்துகிலுங்கொண்டாயவெள்ளம்
வருமுன்வந்தாரிலையேயனைகோலநம்மன்னவரோ. (௱சஎ)

(தலைவியைப்பாங்கிகழறல்.)
புணர்ந்தாருள்வெங்கைபுராநாதர்பாகம்புணர்ந்தநறு
மணந்தாழ்குழலுமைமங்கையல்லாமன்மகிழ்நர்தமைத்

தணந்தாரமைகிலர்நீதரியாமற்றளர்ந்தனையேம்
பணந்தாழகலல்குலாய்நகுவார்நினைப்பார்த்தவரோ. (௱௪௮)

(தலைவிமுன்னிலைப்புறமொழிமொழிதல்.)

உரையாதருன்னமுணர்வார்தமக்கன்றியுற்றதன்னோய்
வரையாமலுள்ளவெல்லாமுரைத்தாலுமதித்துமகங்
கரையாதவர்கட்குரைப்பதில்வெங்கைக்கடவுளுண்ட
திரையாலமுண்டுயிர்நீத்தாலுநன்றுதெரிந்தவர்க்கே. (௱௪௯)

(பாங்கியொடுபகர்தல்.)

வன்பந்தனையமைக்குநஞ்சூணின்மறைப்பவர்போன்
முன்பந்தனையிலர்வெங்கையின்மேவிமுயங்குறுமே
ரின்பந்தருமவரவ்வின்பமூடுறவின்றுபிரி
துன்பங்கலந்தளித்தாரறிந்தேனிலைத்தூமொழியே. (௱௫௰)

(பாங்கியச்சுறுத்தல்.)

சுனைக்காவியன்னவிழிநீபுனத்திற்சுகங்கடியா
துனைக்காதல்செய்தவர்தம்பொருட்டாகவுலைதல்கண்டு
வினைக்காடெறியுமழுவார்திருவெங்கைவெற்பிலன்னை
தினைக்காவன்மற்றொருவர்க்களித்தாலென்னைசெய்குவையே. (௱௫௧)

(நீங்கற்கருமைதலைவிநினைந்திரங்கல்.)

தம்மாவியுந்தலைவரும்வேறுதருமவரோ
யம்மாவுலகிற்பிரிந்திருப்பாரளிமூசுமதக்
கைம்மாவுரியர்திருவெங்கைவாணர்கநகவெற்பி
லெம்மாவியேயவரொன்றாற்பிரிகுவதெவ்வண்ணமே. (௱௫௨)

(தலைவிக்கவன்வரல்பாங்கிசாற்றல்.)

கடிக்குங்கரும்புமதவேள்சிலையவன்கைப்பகழி
முடிக்குங்கடிமலராமினிக்கேள்வெம்முயலகன்மே
லடிக்குங்கமலபதத்தார்திருவெங்கைநாடனையாய்
வடிக்குஞ்சுடரிலைவேலன்பர்தேரின்மணிக்குரலே. (௱௫௩)

(சிறைப்புறமாகச்செறிப்பறிவுறுத்தல்.)

தழலாற்கடியவளியேநறுமென்றழைகள்கொய்யக்
கழலார்ப்புறுமென்பதத்தார்புனத்திலுங்காவகத்துஞ்
சுழலாத்திரியுங்கிளிகாளினிவெங்கைச்சோதிவெற்பி
னிழலாற்பொலிந்தவிளம்பொழிற்கேயிருநெஞ்சுவந்தே. (௱௫௪)

(முன்னிலைப்புறமொழிமொழிந்தறிவுறுத்தல்.)

தொண்டாமெமையுடையான்வெங்கைசூழிளஞ்சோலையிற்பூத்
தண்டாதளவுமளிகாளுமக்குத்தகாதுகண்டீர்
கண்டானினைந்துபின்காணாதபோதெங்களைமறக்கும்
வண்டாரிறைவரொடுகூடியெம்மைமறப்பதுவே. (௱௫௫)

(முன்னின்றுணர்த்தல்.)
நனைக்ராத்தபூமடவார்விதியாகநயந்தருளங்
கனைகாத்தமார்பர்தம்வெங்கையிலேவண்டுகாவிமலர்ச்
சுனைகாத்தவெற்பெமர்வேலண்ணலேயிச்சுகங்கடிந்து
தினைகாத்தவெம்மைத்துயர்புகக்காப்பர்செறித்தினியே. (௱௫௬)
(முன்னின்றுணர்த்தியோம்படைசாற்றல்.)
அந்திப்பொழுதிற்பெடைதாமரையுளகப்படநோம்
புந்திச்சுரும்புகதிர்வருங்காறும்புறத்திரியு
நந்திக்கொடிவலங்கொண்டோன்றிருவெங்கைநாட்டிறைவ
சிந்தித்தெமைமறவாதிருநீநின்றிருவுளத்தே. (௱௫௭)
(கிழவோன்றஞ்சம்பெறுதுநெஞ்சொடுகிளத்தல்.)
தூற்றிக்கடிமலர்ப்பைந்தேன்கவர்நதுசுரும்பினங்க
ளேற்றிக்குவடுறவைத்தாங்கிதணினிருந்தவனா
நீற்றிற்றிகழ்வடிவார்வெங்கைவாணர்நெடுஞ்சிலம்பிற்
போற்றிக்குறவர்வைத்தான்மநமேயென்புரிகுவமே. (௱௫௮)
(பகற்குறியிடையீடு)
(இறைவனைப்பாங்கிகுறிவரல்விலக்கல்.)
கானக்குறவர்திருவெங்கைவாணர்கநகவெற்பி
லேனக்குரலரிவான்குறித்தானையென்பவளு
மானக்கயல்விழியாள்குரலீரவருவதுபோற்
றேனக்கலர்தொடையாய்வருவாளித்தினைப்புனத்தே. (௱௫௯)
(இறைவியைக்குறிவரல்விலக்கல்,)
மாடுண்டவீரப்பிறையார்தென்வெங்கைவரையினிலுன்
சேடுண்டகொங்கைப்பசலைகண்டேதினைக்காப்பயிர்த்துத்
தோடுண்டகாதுடையாயன்னைதானுந்துணிந்திலளீ
யோடுண்டகூழைவேமறுகாநிற்குமுள்ளமுமே, (௱௬௰)
(இறைமகளாடிடநோக்கியழுங்கல்.)
நீடுந்தினையிற்கிளிநோக்குதலெனநின்றுநம்மோ
டாடுந்தலைவர்வரனோக்கிதனுமவருடனே
கூடுந்தொழின்மறைக்குஞ்சுனையூடவர்கொய்யுமலர்க்
காடும்பிரிவுறச்செய்வதென்னோவெங்கைக்கண்ணுதலே. (௱௬௧)
(பாங்கியாடிடம்விடுத்துக்கொண்டகறல்.)
வயிரோசனனுக்குலகீந்தவர்வெங்கைமன்னனுக்குப்
பயிரோடுறவறநீத்தாளென்றெண்ணிப்பழுதுனையேல்
செயிரோசிறிதுமிலாக்கிளிகாடன்சிறுகுடிலுக்
குயிரோடரினவநடந்துசென்றாளென்றுனைமின்களே, (௱௬௨)
(பின்னணெடுந்தகைகுறிவயினீடுசென்றிரங்கல்.)
தன்னோடிருந்தபொழுதிளஞ்சோலைசெய்தன்மைகண்டேற்
கன்னோதனியிருந்தாற்செய்யுமாறுமறிவிக்கவோ

மின்னேவெனநின்றவிர்ச்சடையார்திருவெங்கைவெற்பி
லென்னேவறிந்தருள்செய்வான்வராமலிருந்ததுவே. (௱௬௩)

(வறுங்களநாடிமறுகல்.)

பெறுங்களநஞ்சமுடையாரடியவர்பிள்ளைதனை
யறுங்களமென்னுமொருவெங்கைவாரணரணிவரைமே
னறுங்களவன்னகுழ லீங்கடுங்கலநாணிழந்த
வறுங்களமென்னவிருந்ததந்தோவிம்மணியிதனே. (௱௬௪)

(குறுந்தொடிவாழுமூரநோக்கிமதிமயங்கல்.)

அறத்தாறுடையர்நுகர்பெரும்போகமறமறியா
மறத்தாறுடையர்விரும்புதல்போலும்வளர்சடையின்
புறத்தாறுடையர்திருவெங்கைவாணர்பொருப்படைந்த
குறத்தாறுடையர்மடமாதைமேவக்குறிப்பதுவே. (௱௬௫)

## இரவுக்குறி

(இறையோனிருட்குறிவேண்டல்.)

பொருந்தாரரணம்பொடித்தோர்பவப்பிணிபோக்குதற்கு
மருந்தாமிறைவர்திருவெங்கைவாணர்வரையனையீர்
திருந்தார்கலியிற்புகுந்துநன்மீன்வரச்செய்துமக்கு
விருந்தாகவைத்தகன்றனளியேனையவ்வெய்யவனே. (௱௬௬)

(பாங்கிநெறியினதருமைகூறல்.)

அங்கமுழுவணியானென்றென்வெங்கையரன்றுண்மா
தங்கமுழுமதயானையன்றுடகற்சாடுமொரு
சிங்கமுழுவரியன்றெனவேழமுஞ்சீயமுஞ்சேர்
துங்கமுழுவநமெவ்வாறிருள்வரச்சொல்லுவதே. (௱௬௭)

(இறையோனெறியினதெளிமைகூறல்.)

பங்கந்தனக்கில்லன்வெங்கையிலேநும்பனைமுலைமா
தங்கந்தனக்குமம்மாதங்கபாரந்தரிக்குமிடைச்
சிங்கந்தனக்குந்தளர்வதல்லாமற்சினவிலங்கின்
சங்கத்தனக்கொருநானேதளர்குவன்றாழ்குழலே. (௱௬௮)

(பாங்கியவனாட்டணியியல்வினாதல்.)

பேர்தேதுகொய்வரிழையேதணிவர்பொழில்விளையாட்
டேதேதுசெய்வர்புனலேதுதோய்வரெமைத்துதிப்பிற்
தீதேறுமில்லையெனும்வெங்கைவாணர்செழுஞ்சிலம்ப
சூதேதெனுமுலையாருங்கணாட்டியற்சொல்லுகவே. (௱௬௯)

(கிழவோனவனாட்டணியியல்வினாதல்.)

என்னாட்டணியியலென்னுயிரென்னுனக்கென்றனக்குப்
பொன்னாட்டணியியலெல்லாங்கவர்ந்துபுகழ்மலிந்த
சொன்னாட்டணியியல்வெங்கைபுரேசர்சுடர்க்கிரிசூழ்
நின்னாட்டணியியலெல்லாமுணாத்தருணேரிழையே. (௱௭௰)

(அவற்குத்தன்னாட்டணியியல்பாங்கிசாற்றல்.)
பிறைக்கோலஞ்செய்யுநுதற்சூட்டணிகுவர்பெய்வளையா
லிறைக்கோலஞ்செய்வர்கலையாடுவரவ்விரதிதனைச்
சிறைக்கோலஞ்செய்யும்விழியார்தன்வெங்கைச்சிலம்பமத
னுறைக்கோலஞ்செய்யநறைக்கோலஞ்செய்வரென்னாட்டவரே. (௱எக)
(இறைவிக்கிறையோன்குறையறிவுறுத்தல்.)
வன்மானுமென்முலைச்சேயரிவாட்கண்மடந்தைநல்லாய்
வின்மான்மதிக்கையரவிந்தம்வாட்டவங்வேள்விதரு
நன்மான்கரத்தர்தம்வெங்கையிலேயிற்றைநாளிரவி
னின்மான்மநமுகங்காண்பான்விரும்புநெடுந்தகையே. (௱எஉ)
(நேராதிறைவிநெஞ்சொடுகிளத்தல்.)
ஒலியாலசையச்சருகெழத்தோகையுடன்குதிப்பப்
புலியாவெனவெழக்குஞ்சரமோடப்புளிநரொல்லா
மெலியாவிளையும்வநத்தேயிறைதிருவெங்கைவெற்பர்
மலியாரிருள்வரநெஞ்சமெவ்வாறுவலிப்பதுவே. (௱எ௩)
(நேரிழைபாங்கியொடுநேர்ந்துரைத்தல்.)
மின்னோடுவந்தவிரிசடையோன்றிருவெங்கைவெற்பின்
மன்னோடுநீயிருள்வந்தேகெனச்சொன்மடந்தைநல்லா
யென்னோடுகூடியிருப்பதுபோலவிருந்துமந
முன்னோடுகூடினினியேதுநானிங்குரைப்பதுவே. (௱எச)
(நேர்ந்தமைபாங்கிநெடுந்தகைக்குரைத்தல்.)
கொலையைக்குறித்தவிலைவேலவநின்குறிப்பிசைய
முலையைப்புணர்மென்கொடியிடையாடன்முரணுமநச்
சிலையைக்கரைத்துவந்தேனொருநான்வெங்கைச்செல்வரைப்போன்
மலையைக்குழைக்கவும்வல்லேனினியிந்தமாநிலத்தே. (௱எ௫)
(குறியிடைநிறீஇத்தாய்துயிலறிதல்.)
விந்தாசலமுநிமாதவன்போற்றரன்வெங்கைவெற்பிற்
சந்தாடவிகண்முறித்தெறிவேலொடுதன்புனத்தில்
வந்தாகுலநமக்காக்கியவாரணம்வந்துற்றதோ
நந்தாவநத்திற்பறவையெல்லாமுநரல்கின்றவே. (௱எ௬)
(இறைவிக்கிறைவன்வரவறிவுறுத்தல்.)
மேனைக்குரியமருமகனார்திருவெங்கைவெற்பின்
மானைக்கடந்துசெவியளவோடுமதர்விழியா
யானைக்கரியுமரிக்குச்சரபமுமாகியிந்தக்
கானைக்கடந்துவந்தாருயிர்போலுநங்காவலரே. (௱எஎ)
(அவட்கொண்டுசேறல்.)
முருந்தார்நகையுமைபங்காளர்வெங்கைமுதுகிரிமே
லிருந்தாமரைகண்மறுத்தவிப்போதிலிதழ்திறந்து

விருந்தாமளிகட்கினிதூட்டுமெல்லிகைமென்மலர்கொய்
தருந்தாரணிகுவனில்லாதெழுந்தருளாரணங்கே. (௱௭௮)

(குறியுய்த்தகறல்.)

காதாரமுதம்பெறவேண்டியன்றொருகாரிகையாற்
றாதாய்நடந்ததிருவெங்கைவாணர்சுடர்க்கிரிமேற்
போதார்மலர்மல்லிகையோடுமுல்லையும்போய்க்கொணர்வேன்
பாதாரவிந்தம்வருந்தாதிவணிற்கப்பைங்கொடியே. (௱௭௯)

(வண்டுறைதாரோன்வந்தெதிர்ப்படுதல்.)

தாட்டாமரையென்றலைக்கணிவோன்வெங்கைத்தண்சிலம்பிற்
றீட்டாவொருநடையோவியம்போலுந்திருவுருவி
னாட்டாரெனுங்கதிரோடாங்கதவடைத்தாங்கதன்மேற்
பூட்டாழளியுறப்பூட்டிற்றன்றோவுங்கள்பூவகமே. (௱௮௰)

(பெருமகளாற்றினதருமைநினைந்திரங்கல்.)

விண்டெரியாதுமுகிலான்முகில்பொழிவெள்ளத்தினான்
மண்டெரியாதெவ்வகையடைந்தாயன்பமாறன்வயற்
கண்டெரியாவிருளிற்போமருமைகருதியன்றோ
பண்டெரியாவொளிர்வெங்கைப்பிரான்பதம்பாலித்ததே. (௱௮௧)

(புரவலன்றேற்றல்.)

முன்காட்டுபந்தமும்வீடுமுள்ளோன்வெங்கைமொய்வரைசூழ்
கொன்காட்டிலுன்குழல்போலேயிருண்டவிக்கூரிருள்வாய்
பொன்காட்டுநல்லெழிலுன்னிடைபோலப்புயனுடங்கு
மின்காட்டிவந்ததிங்குன்னூர்வழியைவிழியினுக்கே. (௱௮௨)

(புணர்தல்.)

ஓர்போதெனும்பிறைவேணியிற்சூடுமொருவர்வெங்கைத்
தேர்போலகன்றமணியல்குலாயிருசெய்யவிள
நீர்போலமைந்தின்பமேதிரண்டாங்குறுநின்முலைக்கண்
மார்போடழுந்தத்தழுவவென்னூன்செய்தமாதவமே. (௱௮௩)

(புகழ்தல்.)

பெண்காட்டியவொருபங்குடையாருதிர்பிட்டினுக்கா
மண்காட்டியபொன்முடியார்திருவெங்கைவாணர்வெற்பிற்
றண்காட்டியமலர்க்கோதாய்குரும்பைகடானெருமுக்
கண்காட்டுமாயினுமொவ்வாநினதொருகண்முலையே. (௱௮௪)

(இறைமகளிறைவனைக்குறிவயின்விலக்கல்.)

அரவெளிதோவவ்வனமெளிதோவன்றியாற்றின்மடுக்
கரவெளிதோநந்திருவெங்கைவாணர்களமருட்டு
மிரவெளிதோவிவையெல்லாங்கடந்திங்கெனையளிப்ப
வரவெளிதோவென்னுயிர்க்கரணாகியமன்னவனே. (௱௮௫)

(அவனிறைவியையில்வயின்விடுத்தல்.)
வலம்பொலிவீரமழுவாளன்வெங்கைமணிவரைமே
னலம்பொலிவாணுதல்வேற்கணைல்லாயுன்னடைவிரும்பி
யலம்பொலிவோடுதொடரோதிமமிலைஞ்சலைதாட்
சிலம்பொலியாமற்பரிகரித்தேகுன்றிருமனைக்கே. (௩அ௬)
(இறைவியையெய்தப்பாங்கிகையுறைகாட்டல்,)
முட்டுப்படாததிருவாளன்வெங்கைமுளரிமுகை
நட்டுப்படாதவிளமுலையாயுன்னகையுடனே
மட்டுப்படாமலிகலுந்தளவின்றுமட்டுப்பட்டுக்
கட்டுப்படாமலென்கைக்கேவந்துற்றதுகண்டருளே. (௩அ௭)
(இற்கொண்டேகல்.)
சூடுந்துளபமணிநீலவெற்புந்தொடர்ந்துமுன
நாடுந்திருவடியெம்மான்றிருவெங்கைநாடனையா
யாடுங்கலாபமயில்போலுறங்குநம்மன்னையினுற்
றேடும்பொருளல்லமோசெல்லுவோநந்திருமனைக்கே. (௩அ௮)
(பின்சென்றிறைவனைவரவுவிலக்கல்.)
தம்மேற்பணிபுனைவெங்கைபுரேசனைச்சார்கிலர்போற்
கைம்மேற்பொருடெரியாவிருள்வாய்வெங்கரியுடனே
தெம்மேற்புலிதிரியுங்காட்டினீயிச்சிறுவழிவந்
தெம்மேற்பழிசுமத்தாதொழிவாயெம்பிறையவனே. (௩அ௯)
(பெருமகன்மயங்கல்.)
ஆய்வாரளவினளவாகும்வெங்கையமலர்வெற்பிற்
றேய்வானுடங்கிடையாயறிந்தானைச்செலவிடுப்போர்
போய்வாவென்பாரிவ்வுலகினிற்போவெனவேமுடித்து
நீவாவென்றுயிலைகண்ணேட்டமில்லைகொனின்றனக்கே. (௩௯0)
(தோழிதலைமகடுயர்கிளந்துவிடுத்தல்.)
வம்புகுறித்துவருமாரளியினமல்லிகைப்பூங்
கம்புகுறிக்கும்பொழுதில்வெங்கேசனைக்கைதொழுது
நம்புகுறிக்கண்வருமண்ணலேநின்னகரினிற்போய்க்
கொம்புகுறித்துவரக்காட்டொலியையெங்கொம்பினுக்கே. (௩௯௧)
(திருமகட்புணர்ந்தவன்சேறல்.)
முப்போதினுமந்தணர்தொழுதேத்துறுமுத்தலைவே
லப்போதகன்றிருவெங்கையன்னுளல்குற்காட்டரண
மொப்போதெனவொண்மணிவிளக்கேற்றியுதவிசெய்யுஞ்
செப்போதிளமுலையாய்செல்லுவேனென்றிருநகர்க்கே. (௩௯௨)
(இரவுக்குறியிடையீடு.)
(இறைவிக்கிகுளையிறைவரவுணர்த்தல்.)
வள்ளலம்பாகுமரியாளன்வெங்கைமணிவரைமேல்
விள்ளலம்பானல்விழியாய்துணைபுணர்மென்சிறக

ருள்ளலம்பாதுதுயில்கூர்தருதலொழிந்தெழுந்து
புள்ளலம்பாநின்றதென்னோநமதிளம்பூம்பொழிற்கே. (௱௯௩)

(தான்குறிமருண்டமைதலைவிபாங்கிக்குணர்த்தல்.)

கானலைவேணின்முதிர்வாலெதிருறக்கண்டுமறி
மானலைநீரெனவோடுதல்போல்வெங்கைவாணர்வெற்பிற்
றேனலைவார்தொடையார்க்குறியாமெனச்சென்றுநைந்தேன்
பானலைவென்றகண்ணாய்குறிவேறுறப்பைம்பொழிற்கே. (௱௯௪)

(பாங்கிதலைமன்றீங்கெடுத்தியம்பல்.)

மறிக்கும்புலனுடையன்பர்தம்பாவமாமுறியத்
தறிக்குங்கனன்மழுவெங்கைபுரேசர்தடஞ்சிலம்பில்
வெறிக்குங்குமமுலைமெல்லியலாயிந்தமேதினியோர்
குறிக்குங்குறிசெய்வரோநமைபாளக்குறித்தவரே. (௱௯௫)

(புலந்தவன்போதல்.)

மறந்தடுக்குஞ்செயல்வெங்கைபுரேசர்மறைவனத்தி
லறந்தழைக்குந்திருவாலயம்போலுலகாரிருளைப்
பிறந்தழித்தென்றுமொளியோடுலாவரும்பேரிருவர்
திறந்தடைக்கின்றதன்றோநெஞ்சமேநந்திருமனையே. (௱௯௬)

(புலர்ந்தபின்வறுங்களந்தலைவிகண்டிரங்கல்.)

பணஞ்செய்பொறியிளநாகாபரணர்பகைதடிந்து
நிணஞ்செய்சுடர்மழுவெங்கைபுரேசர்நெடுஞ்சிலம்பிற்
குணஞ்செய்கதிரிலைவேலன்பர்தாங்குளிர்மாலையிட்டு
மணஞ்செய்தனரெனவோதழைந்தாய்மலர்மாதவியே. (௱௯௭)

(தலைமகள்பாங்கியோடுரைத்தல்.)

நல்லார்தொடர்பிளங்காய்முதிர்வாமெனநாடுரைப்ப
வல்வார்மணிமிடற்றெம்மான்றிருவெங்கையாதிவெற்பின்
மல்லார்திணிபுயத்தன்பர்நம்பான்முனம்வைத்தநட்பு
வில்லார்சிறுமென்றளிர்முற்றலாகிவிளைந்ததுவே. (௱௯௮)

(தலைமகளவலம்பாங்கிதணித்தல்.)

தீங்கையொன்றானுமுறுகிலர்போற்றுந்திருவடியான்
காங்கையன்றாதைதன்வெங்கையிலேபைங்கநிறக்
கோங்கைவென்றேங்குமுலையாய்நம்மன்பர்குறிபிழையார்
வேங்கையென்றாயினும்பூத்ததுண்டோமுல்லைமென்மலரே. (௱௯௯)

(இறைவன்மேற்பாங்கிகுறிபிழைப்பேற்றல்.)

பொருவோவிலாதிருவெங்கையிலேமுன்புனத்திலமை
யுருவோடுயிரமுதென்றுபொய்கூறியுழன்றவரோ
வெருவோமிரவம்பழியுமும்மூர்க்குவினவிவழி
வருவோம்வரினுமெமைநோக்குறீரெனவந்திலமே. (௨௱)

(இறைவிமேலிறைவன் குறிபிழைப்பேற்றல்)

நறவேயிதழியுங் கங்கையும்பாம்புநகைமதியு
முறவேபண்புமணிமுடியார்வெங்கனூரனைய
புறவேயிளமயிலேயமுதேபசும்பொற்கொடியே
மறவேனுனையென்றுநீநினையாமன்மறப்பினுமே. (உ௱க)

(தலைமகள் குறிமருண்டமைதோழி தலைவற்குரைத்தல்.)

ஈயாதவரைக்கண் டுவரெனச்சொல்லிரவலர்போற்
போயாவியிற்சிறுமாங்கனிவீழப்புரவல்வே
நீயாவியிற்செய்குறியெனவேசென் றுநித்தர்வெங்கை
வீயாமலர்க்குழலாள்வறிதேநொந்துமீண்டனளே. (உ௱உ)

(தோழி தலைமகன்சொல்லியகொடுமை தலைமகட்கியம்பல்.)

கள்ளெழுங்கொன்றையர்வெங்கையிலேமைக்கடலின்மதி
நள்ளெழுங்காலம்பெறவேகுறியிடநான்மருவி
யுள்ளெழுங்காமமருந்துபெருமலுழன்றுசென்றேன்
புள்ளெழுங்காலையென்றானன்பதாமிளம்பூங்கொடியே. (உ௱௩)

(என்பிழைப்பன்றென்றிறைவிநோதல்.)

அஞ்சாமதற்றெறும்வெங்கைபுரேசரணிமிடற்றி
னஞ்சாமிருளிற்குறிபிழையாதொருநான்குறித்துத்
துஞ்சாதிருந்துநதுஞ்சுற்றுளெனவவர்தூற்றப்பட்டே
னெஞ்சாவமுதனையாயினிநானிதற்கென்செய்வதே. (உ௱௪)

(தாய்துஞ்சாமை.)

கயிற்றுணிகழரவம்போற்சகந்தனிற்கற்பனையார்
குயிற்றுணிகழிறைவெங்கையிலேயெழுங்கூன்பிறையோ
ரெயிற்றுணிகழுமிளம்பேதையாமிவ்விரவுவந்து
துயிற்றுவனைதனைவெங்காலதூதர்துயிற்றுகவே. (உ௱௫)

(நாய்துஞ்சாமை.)

கூளைவாய்மடைதிறக்கும்பலவால்வயற்றேன்றுசெங்கெல்
விளைவாய்மலியுந்திருவெங்கைவாணர்தம்வெற்பிடைமா
தளைவாய்மடமயிலேதனிவேழந்தனையொருபுன்
வளைவான்குமலிகுரைத்திங்குறுமன்மறித்ததுவே. (உ௱௬)

(ஊர்துஞ்சாமை.)

நீர்துஞ்சுஞ்செஞ்சடையார்வெங்கைவாணர்நெடுஞ்சிலம்பில்
வார்துஞ்சுமென்முலைக்கோமளமேவந்துமால்வரைமேற்
கார்துஞ்சமாவினமெல்லாமுன்றுஞ்சக்கடலுந்துஞ்ச
வூர்துஞ்சிலாததென்னோவிதுநான்செய்துவூழ்வினையே. (உ௱௭)

(காவலர்கடுகுதல்.)

தேவாதிதேவர்திருவெங்கைவாணர்சிலம்பர்நமை
மேவாதவண்ணங்கதிர்வேன்மருட்டும்விழிமடவாய்

கூவாமறுகிற்றிரிகாவலர்கையிற்கொட்டுபறை
வாவாவெனநெய்தலம்பறைகூவுநம்வாய்தலுக்கே. (௨௱௮)

(நிலவுவெளிப்படுதல்.)

ஒழுங்கியிருந்தசடையாளர்வெங்கையொருவர்வெற்பிற்
புழுங்கியிருந்தமநத்தன்பர்தாம்வந்துபோமளவு
மழுங்கியிருந்துமிளிர்திங்களையொருவாளரவம்
விழுங்கியிருந்துவிடாதுகொலோதளிர்மெல்லியலே. (௨௱௯)

(கூகைகுழறுதல்.)

நாகாபரணர்திருவெங்கைநாயகர்நல்லடிக்கண்
பாகாதவொனக்கூகூவென்றத்தியதிலிருந்து
நீகாவலனைவிலக்குகின்றாயுயிர்நீத்திலனே
கூகாய்நினதடல்காண்பேன்விடியிற்கொடிமுன்னமே. (௨௱௰)

(கோழிகுரற்காட்டுதல்.)

வாய்மையெனினும்புலரியைக்கூறுதல்வாரணங்காள்
செய்மையறுநங்கொழுநர்தங்கூட்டஞ்சிதைத்தெமக்குத்
தீய்மைபயந்தமையால்வெங்கைநாயகர்செய்தவறத்
தூய்மையுணர்ந்தவர்வாய்மையன்றாமெனச்சொல்லுவரோ. (௨௧௧)

(வரைதல்வேட்கை.)

(தலைமகளைப்பாங்கிபருவரல்வினவல்.)

என்னிடத்திற்றகுறையுளவோநம்மையின்றவன்னை
தன்னிடத்துற்றமுனிவோவுலகந்தருமிமய
மின்னிடத்துற்றபழமலையார்திருவெங்கையன்னாய்
நின்னிடத்துற்றதென்னோவுரையாய்நின்னினைவினையே. (௨௧௨)

(அருமறைசெவிலியறிந்தமைகூறல்.)

வேலையிலேவருநஞ்சமுண்டார்திருவெங்கைவெற்பின்
மாலையிலேவண்டிசைபாடுமென்குழல்வாணுதலாய்
சோலையிலேநங்கொழுநர்வந்தேகதிர்தோன்றுசிறு
காலையிலேதருமாலையன்றோவன்னைகண்டனளே. (௨௧௩)

(தலைமகன்வருந்தொழிற்கருமைசாற்றல்.)

நாயுஞ்சுணங்கனுமூருவெங்காவலுஞ்சந்திரனுந்
தாயுங்குடிஞையுஞ்சேவலுந்தப்புஞ்செயலெளிதோ
பாயுஞ்சினவிடையார்வெங்கைவாணர்பனிவரைமேற்
காயுங்கதிரிலைவேல்வீரர்நம்மைக்கருதினுமே. (௨௧௪)

(தலைமகடலைமகனூர்க்குச்செலவொருப்படுதல்.)

அறிவேயொருவடிவாமீசர்வெங்கையிலன்னமன்னா
பொறிவேலிறைவர்தம்மூர்க்கேகியாங்கவரெண்ணமெல்லா
மறிவேமவரன்பிலாமைகண்டாலுமையாடலமாய்
மறிவமறிந்தபினந்தகனூர்க்குவழிகொள்வமே. (௨௧௫)

(பாங்கியிறைவனைப்பழித்தல்.)
வன்பற்றவர்தொழும்வெங்கைபுரேசர்மணிவரைமே
னின்பற்றிலர்கைவிடுத்தாரிறையவர்நீயவர்மே
லன்பற்றிலைபணங்கேசிறிதேனுமன்பற்றவரைப்
பின்பற்றுவருவாரோவிதுதான்மிகப்பேதைமையே. (உசசு)

(தலைமகளிபற்படமொழிதல்.)
சுரும்புகளிக்கும்பொழில்வெங்கைவாணர்சுடக்கிரிமே
லரும்புகடுக்குமுலையாயுலகுள்வாவியெலாம்
விரும்புகொடைத்தண்ணளிவேந்தர்நன்மைவெறுப்பவரோ
கரும்புகசப்பதுவாய்க்குறையேயிந்தக்காசினிக்கே. (உகள)

(கனவுநலிபுரைத்தல்.)
ஓடுஞ்செயல்செயுமாசைத்தளையையொடித்திருத்தல்
கூடும்படிசெயும்வெங்கைபுரேசர்குவட்டில்விழி
மூடும்பொழுதெதிர்தோன்றிநிற்பார்கண்முகிழ்திறந்தா
னீடும்புகழுடையாரெதிர்தோன்றிலர்நேரிழையே. (உகஅ)

(கவினழிபுரைத்தல்.)
ஈயார்பொருளுமிறையாக்கினாறுமெனத்துணைவர்
தோயாமுலைகணலமிழந்தேன்மதிருடுமொரு
மாயாமயமலர்வெங்கைபுரேசர்மணிவரைமேல்
வேயாம்பணைபுரைமென்றோட்கருங்கண்விளங்கிழையே. (உகசு)

(தன்றுயர்தலைவற்குணர்த்தல்வேண்டல்.)
விழிக்கிடனாகுநுதலார்தம்வெங்கையில்வேந்தொடுபெண்
பழிக்கலையென்றொருவார்த்தையையாரும்பகர்ந்துமிகுஞ்
சுழிக்கிடனாகுந்திருப்பாற்கடலெனத்தோன்றுபுகழ்
மொழிக்கிடனாகுதுமென்பாரைக்கண்டிலமொய்குழலே. (உஉ0)

(பாங்கிநின்குறைநீயேசொல்லெனச்சொல்லல்.)
பொறியாலயம்பொய்கைசூழ்வெங்கைவாணர்தம்பூங்கரத்தின்
மறியாமெனப்பிறழ்சேயரிவாட்கண்மடந்தைநல்லாய்
பிறியாதுன்னுள்ளத்திருப்பார்க்கயலவர்பேசுவதென்
னறியாதவர்தமக்கன்றோவொருவரறிவிப்பதே. (உஉக)

(தலைமகளலர்பார்த்துற்றவச்சக்கிளவி.)
கலராலறிவரியார்வெங்கைவாணர்கனகவெற்பிற்
பலராலணியும்புகழார்பிறப்பொன்றிப்பூவிமதன்
மலரால்வருந்துயர்நீக்குவராயினுமன்னுள்ர்வா
யலரால்வருந்துயர்நீக்குகிற்பாரையறிந்திலமே. (உஉஉ)

(ஆறுபார்த்துற்றவச்சக்கிளவி.)
ஒருகோடுதம்மிற்குறைந்தநல்வாரணமொன்றுமன்றி
யிருகோடுவந்துமிகுங்களிறேனுமிகன்மதமா

வருகோடுவெவ்வதுவென்றாலும்வெங்கையமலர்தரு
முருகோடுறழும்வடிவாரிடைமகமுந்துறுமே. (௨௨௩)

(காமமிக்ககழிபடர்கிளவி.)

மாமாயனுந்தொழும்வெங்கைபுரேசர்மணிவரைமேற்
பாமாமுநிவன்மலையாகிலமொருபாலசைய
வேமாயர்வேய்ங்குழலாலூதமேனிவிறகிற்பற்றுங்
காமாநலமவியாக்கடலேழுங்கவிப்பினுமே. (௨௨௪)

(தன்னுட்கையாறெய்திடுகிளவி.)

வம்புற்றனைவெண்மதியாலொடுங்கினைவன்டிழந்தா
யப்புற்றனைமிகுகண்முத்துகுத்தனையம்புயமே
நம்புற்றரவணியெம்மான்றிருவெங்கைநாட்டிறையை
வெம்பற்றனையெனைப்போலென்பதின்றுவெளிப்பட்டதே. (௨௨௫)

(நெறிவிலக்குவித்தல்.)

நீரலைவேணியர்வெங்கையில்வாழுநெடுந்தகையைச்
சீரலைவாய்வருஞ்செவ்வேண்முருகனுஞ்சேறலருஞ்
சாரலைமேவுமொருபெருங்காட்டுத்தனிவழியில்
வாரலைநீயென்பவர்க்கேவருவனவண்புகழே. (௨௨௬)

(குறிவிலக்குவித்தல்.)

பிளவுமதிச்செஞ்சடையாளர்வெங்கைப்பெருந்தகைதான்
றளவுநகைக்கருங்கண்மடவாய்விண்டலமுகட்டை
யளவுபொழிற்குறிவந்தாற்றுயில்பொழுதார்க்கும்புள்ளாற்
களவுவெளிப்படினென்னாய்முடியுநங்காரியமே. (௨௨௭)

(வெறிவிலக்குவித்தல்.)

மறிகொண்டவங்கையர்வெங்கையிலேமென்மலர்ப்பொழில்வாய்க்
குறிகொண்டவன்பர்தருநோயென்றன்னைகுறித்திலளாய்
நெறிகொண்டதெய்வமணங்கிற்றென்றேதன்னினைவழிந்து
வெறிகொண்டனண்மற்றொருவிதியோவிதுமெல்லியலே. (௨௨௮)

(பிறவிலக்குவித்தல்.)

அருங்கன்னிவெண்மதிசூடும்பிரான்வெங்கையாவிமலர்க்
கருங்கண்ணிகங்கையின்மென்றூவியன்னங்கருதிவைத்த
பெருங்கண்ணியிற்புனற்காக்கைபட்டாங்குபிறர்நமதின்
மருங்கண்ணிவந்தனரென்பதுகேட்டின்னுமாய்ந்திலமே. (௨௨௯)

(குரவரைவரைவெதிர்கொள்ளுவித்தல்.)

பூண்கொண்டமென்முலையாய்வெங்கைவாணர்பொதியவெற்பின்
மேலண்கொண்டநங்கருத்தின்றவர்க்கோதுமிசைவுபெறு
நாண்கொண்டநங்கற்பழிதனன்றோவன்றிநாணிழந்து
மாண்கொண்டவங்கப்புறுதன்னன்றோநம்மரபினுக்கே. (௨௩௰)

(வினவியசெவிலிக்குமறைத்தமைவிளம்பல்,)

வண்டுகலிக்குந்தொடையாயெம்மன்னையிம்மாதுதுயில்
விண்டுதரித்திலளென்கொலென்றாளரன்வெங்கைவெற்பிற்
பண்டுபுனத்தில்வருமதவாரணம்பாய்கனவு
கண்டுபினைத்துயின்றாளிலையென்றுகரந்தனளே. (௨௩௧)

(அலரறிவுறுத்தல்,)

கோட்டுமலைவில்விறலாளர்வெங்கைக்குளிர்சிலம்பிற்
றீட்டுமிலைமலிவேலண்ணலேநின்றிருக்கரத்தால்
வேட்டுமகிழ்செய்யணங்கெனவேயிவள்மென்குழலிற்
சூட்டுமலர்கண்டுலகமெலாமலர்சூட்டியதே. (௨௩௨)

(தாயறிவுணர்த்தல்.)

நீர்பூத்தசெஞ்சடையார்வெங்கைவாணர்நெடுஞ்சிலம்பிற்
கார்பூத்தவண்மைமடங்கலன்னுபன்னைகாலமன்றி
யேர்பூத்தபைந்தளிர்மெல்லியலாமிவ்விளங்கொடிமேற்
பீர்பூத்ததென்னைகொலோவறியேனெனப்பேசினளே. (௨௩௩)

(வெறியச்சுறுத்தல்.)

அலைமேற்கிளர்பொறிவாழ்வெங்கைவாணரணிவரைமேற்
சிலைமேற்பயில்கைத்தலத்தையநீயெமைச்செய்துயர்க்குத்
தலைமேற்படுமெறிக்கோர்கான்முடக்குந்தகைமையென்னக்
கொலைமேற்பயிலுமெமர்வெறியாடல்குறித்தனரே. (௨௩௪)

(பிறர்வரைவுணர்த்தல்.)

மகவானிறைஞ்சுந்திருவெங்கைவாணர்வரையணங்கின்
முகவாரிசமுமுலையுங்கண்டார்ன்மிகுமோகமுறுஞ்
சகவாழ்வினரையுரைப்பதென்யான்மறைசாற்றுகின்ற
சுகவாமதேவருமின்றேவிடுவர்துறவினையே. (௨௩௫)

(வரைவெதிர்வுணர்த்தல்,)

கொன்னெறிவேற்குமரன்போலெமரெதிர்கொண்டுதரு
நன்னெறியாற்பெறலாகவுந்தென்வெங்கைநாதர்வெற்ப
செந்நெறியாற்செல்பதிக்கோர்கொடுநெறிசெல்பவர்போன்
மின்னெறிவேற்கண்ணியைக்களவாற்பெறவேண்டினையே. (௨௩௬)

(வரையுநாளுணர்த்தல்.)

பணிவாய்விரிசடைப்பெம்மான்றென்வெங்கைப்பனிவரைமேற்
கணிவாய்மலர்ந்துமணநாளுரைப்பக்கடன்றரக்கிண்
கிணிவாய்மலரனையாண்மறிப்பாயிடுங்கீற்றெனவெண்
மணிவாய்ப்புயத்தன்பவூர்கொண்டதால்வெண்மதியமுமே. (௨௩௭)

(தலைமகள்மிவறிவுறுத்தல்.)
பிற்பழியாதுமிலாலசுந்தரர்பித்தவெனுஞ்
சொற்பழியாளர்திருவெங்கைவாணர்சுடர்க்கிரிமேற்
றற்பழியாகநின்றன்பழிநாணித்தலைவவறக்
கற்பழியாதுமடமாதெனையுங்கரந்தனளே. (உ௩அ)

(குறிபெயர்த்திடுதல்.)
ஐயுற்றெமர்தெளிவானிருந்தார்நும்மடிச்சுவடு
கொய்யுற்றபூம்பொழிலூடுகண்டேமென்குழலுமையாண்
மெய்யுற்றவங்கணர்வெங்கையிலேகுறிவேறுகொண்டு
மையுற்றகண்ணியொடும்விளையாடுகமன்னவனே. (உ௩கூ)

(பகல்வருவானையிரவுவருகென்றல்.)
நந்தேடவிழ்ந்துநறவூற்றிருக்குநளினமிசை
வந்தேறிமென்றுயில்கொள்வெங்கைவாணர்வரையின்மலர்க்
கொந்தேறுமென்குழலாண்முகவாவிக்குமுதமலர்ச்
செந்தேனிரவினல்லாற்கிடையாதென்னசெய்யினுமே. (உ௪0)

(இரவுவருவானைப்பகல்வருகென்றல்.)
சேல்கொண்டதண்பணைசூழ்வெங்கைவாணர்தஞ்சேய்திருக்கை
வேல்கொண்டகண்ணிளம்பெண்ணோடுகூடவிருப்பமுறு
மால்கொண்டவெங்களிறன்னாய்மலர்மனைவாய்திறக்குங்
கோல்கொண்டுவந்திலையேலரிதாலவட்கூடுதலே. (உ௪க)

(பகலினுமிரவினும்பயின்றுவருகென்றல்.)
சொல்லும்பொருளுமெனநிறைவாரிளஞ்சூன்மிடற்ற
நெல்லுங்கரும்புநிறைவெங்கைவாணர்நெடுஞ்சிலம்ப
வில்லும்பிறையும்பணிவாணுதற்றளிர்மெல்லியலை
யல்லும்பகலுமகலாதிவண்வந்தடைந்தருளே. (உ௪உ)

(பகலினுமிரவினுமகலிவணென்றல்.)
பாவலர்பாடும்புகழ்வெங்கைவாணர்பனிவரைமேன்
மேவலராருயிருண்டமைவேலவவெம்பகலி
லேவலரார்யநெருங்குமின்றேன்வண்டெனவிரவிற்
காவலர்சூழ்ந்துதிரிவார்பொன்காத்தகடியெனவே. (உ௪௩)

(ஊரவோனூடுமூருங்குலனுமரபும்புகழும்வாய்மையுங்கூறல்.)
துதியுந்தொடையும்புனைபுயத்தாய்மணஞ்சூழ்ந்திலையே
னதியும்பணியும்புனைவேணியர்வெங்கைநாட்டினினின்
பதியுங்குலனுமரபுநல்வாய்மையும்பல்புகழு
மதியுங்களங்கமும்போலொழியாமன்மறுப்படுமே. (உ௪௪)

(ஆறுபார்த்துற்றவச்சங்கூறல்.)
அரியும்பணியுந்திருவெங்கைவாணரடியரல்லார்
திரியும்பவநெறிபோன்றொழியாதிராதேர்ந்துகொடு

வரியுங்கரியுஞ்செறியுஞ்சிறுவழிவாரலைநீ
புரியுங்கருங்குழலாட்பெருட்டாகப்புரவலனே. (௨௪௫)

(ஆற்றாததன்மைபாற்றக்கூறல்.)

அழுவாண்மொழிதளர்வாளையகோவென்றலம்வருவாள்
விழுவாள்புரண்டெழுவாள்வெங்கைவாணரைவேண்டியடி
தொழுவாளநங்கன்கொடியனென்பாளுயிர்சோர்ந்திடுவாள்
முழுவாள்விழிமடமாதெண்ணமன்பமுடித்தருளே. (௨௪௬)

(காவன்மிகவுரைத்தல்.)

ஆக்குறுங்காரணர்வெங்கைபுரேசரணிவரையாய்
தாக்குறுஞ்சியமும்வேழமும்வேங்கையுந்தப்பிவந்து
மாக்குறுஞ்சோலையெம்மூர்புகுந்தாலுமனையருகு
காக்குறுங்காவலர்தம்மைமெவ்வாறுகடப்பதுவே. (௨௪௭)

(காமமிகவுரைத்தல்.)

தாள்வலிகொண்டுபடுங்துகாலன்றனைமருட்டு
மாள்வலிகொண்டவர்வெங்கைவெற்பாநின்னணியலர்கற்
றோள்வலிகொண்டுதவிர்ப்பினலாமற்றுயர்விளைக்கும்
வேள்வலிகொள்ளுந்துணையெங்கள்பேதைக்குவேறில்லையே. (௨௪௮)

(கனவுநலியுரைத்தல்.)

மனவேயணியுந்திருவெங்கைவாணர்வரையன்பங்கு
சினவேலிறைவநின்றோளொடுகொங்கைதிளைக்கவருங்
கனவேயுபருந்துறக்கமென்பாணிணைக்காண்பரிய
நனவேதுயரந்தருகின்றதீவெங்ரகென்பளே. (௨௪௯)

(கவினழிபுரைத்தல்.)

கருவரையெங்குடிருவெங்கைவாளர்தங்கண்ணளித்த
வொருவரையன்னவெற்பிலுடையீரிங்குமதருளா
லிருவரைபொன்னுமிருவேலைமுத்தமுமீன்றனவாற்
குருவரையன்னமென்றோளுடையாட்குக்குறையென்னையே. (௨௫௦)

(ஒருவழித்தணத்தல்.)

(தன்பதிக்ககற்சிதலைவன்சாற்றல்.)

என்மனநல்லிளம்பூங்கொடிபால்வைத்திளங்கொடித
ன்மனமென்னொடுகொண்டேர்புகுந்திங்குநான்வருவேன்
வன்மனம்வந்துபுகாவீசர்வெங்கைமருவலர்போ
னின்மனமஞ்சலைசெங்கயல்வாட்கண்ணிரைவளையே. (௨௫௧)

(பாங்கிதலைமகனைச்செலவுவிலக்கல்.)

உளனுருயிரினுயிர்போலவேயவ்வுயிரினுயிர்
தானுமொருவன்றிருவெங்கைவெற்பிலுன்றன்பதிக்குப்
போனல்விரைந்துவருவாயலையன்பபோகலைநீ
யானுயிழைத்துயர்கண்டாவிகொண்டிங்கிருக்கிலனே. (௨௫௨)

(தலைவனீங்கல்வேண்டல்.)
நீர்புக்குவாழுநெடுமீனந்நீர்தனைநீங்கியுய்ந்தாற்
றூர்புக்குவாழுமுலையாளையானுந்தணந்துய்குவேன்
மார்புக்குமாலையரவானவர்வெங்கைவாணர்வெற்பி
லூர்புக்குநான்வரவேண்டுமின்னேநின்னுளத்திசையே. (௨௫௩)
(தலைமகனைப்பாங்கிவிடுத்தல்.)
கொந்தார்மலர்க்குழல்வெண்முத்தவாணகைக்கோமளத்தின்
சிந்தாகுலமுற்றுநீயறிவாயன்பதேமொழிக்கு
நந்தாமணிவிளக்கன்னார்தம்வெங்கைநகரினிற்போய்
வந்தானெனச்சென்றுநான்கூறநீசென்றுவந்தருளே. (௨௫௪)
(பாங்கிதலைவிக்கவன்செலவுணர்த்தல்.)
அம்மூலகாரணர்வெங்கைபுரேசரணிவரைமேற்
செம்மூரிவேலவர்நீயாரணங்கின்முன்செல்லுமுன
மெம்மூர்புகுந்துவருவலென்றேகினரேந்திழையாய்
நம்மூர்மருங்குறவிந்நேரம்வந்துநண்ணுகுவரே. (௨௫௫)
(தலைவிநெஞ்சொடுபுலத்தல்.)
விளித்தாருயிரையடிநீழல்வைப்பவர்வெங்கையிலே
யளித்தார்புனைகுழலாயகமேவனென்றகந்தெளியத்
தெளித்தாரகன்றனரேலவர்வார்த்தைதெளிந்துமனங்
களித்தார்தமக்குளதோபிழைதானிந்தக்காசினிக்கே. (௨௫௬)
(சென்றோனீடலிற்காமமிக்ககழிபடர்கிளவி.)
நூலையணியுஞ்சடையாளர்வெங்கைபுரேசர்வெற்பிற்
பாலைமணங்கமழ்மாதிருப்பாளெனப்பச்சைமயிற்
காலையனையநங்காதலர்தாமலர்க்கால்வருந்த
நாளைவராமலிடம்போய்மறியுநன்னாகளே. (௨௫௭)
(தலைவியைப்பாங்கியாற்றுவித்தல்.)
பொலம்புரிவார்சடையார்வெங்கைவாணர்பொருப்பணங்கே
கலம்புரிமேனியிற்குங்குமந்தோய்தன்களபமென்ன
நலம்புரிகாதலர்தம்பதிநோக்கிநடந்தவழி
வலம்புரிதோன்றுமடிப்பொடிபூசுகவந்தருளே. (௨௫௮)
(தலைவன்வந்தமைபாங்கியுணர்த்தல்.)
மலையானைமாதுலனென்பார்தம்வெங்கைவரையிடைப்பூஞ்
சிலையானைவென்றவெழிலுடையார்நஞ்செழும்பதிக்குக்
கொலையானைமேற்பசும்பொன்னோடுவந்தனர்கோதைகமழ்
முலையானைமேற்பசும்பொன்னொழிவாய்மலர்மொய்குழலே. (௨௫௯)
(பாங்கிதலைவனொடுநொந்துவினாதல.)
காரார்மணிமிடற்றெம்மான்றிருவெங்கைக்காரிகைதன்
ஏரார்நுதலுமுடியாக்குழலும்பெருவிழியி

பொருள்வயிற்பிரிதல்.

சீரார்பிறைசூடபுங்கண்ணுருமனன்னீதியன்றே
வாராதொழிந்தனேநின்கருத்தேதுசொன்மன்னவனே. (உ௬0)

(தலைவன்பாங்கியொடுநொந்துவினுதல்.)

அலையர்நிலையர்திருவெங்கைவாணரணிவரைமீர்
லையானிறைமதிவேய்ங்குழல்சோலைக்கருங்குயில்யாழ்
மலையாநிலஙல்லவோவல்லவோவம்மதநனெடுஞ்
சிலையானுமிழ்வதலரோவம்போவென்னசெப்புமினே. (உ௬௧)

(தலைவியையாற்றுவித்திருந்தவருமைசாற்றல்.)

நீர்மல்குகண்ணும்வளைதீர்ந்தகையும்வெங்கெட்டுயிர்ப்பும்
பீர்மல்குகொங்கையுமாய்ப்பின்னேவேறுபிரைப்பிலதா
பார்மல்குசெஞ்சடையார்வெங்கைவாணரருளதனுந்
முர்மல்குதோளண்ணலேபுரந்தேனின்றனியுயிரே. (உ௬௨)

(வரைவிடைவைத்துப்பொருள்வயிற்பிரிதல்.)

(என்பொருட்பிரிவுணர்த்தேந்திழைக்கென்றல்.)

இடைநிலையாம்பொருளுண்டேன்முதனிலையெய்தறமும்
கடைநிலையாமின்பமுமேவுமென்றனர்காதலமொன்
றடைநிலையாம்பதத்தெம்மான்றிருவெங்கையாயிழைக்குத்
தொடைநிலைவார்குழற்பூங்கொடியேசென்றுசொல்லுகவே. (உ௬௩)

(நின்பொருட்பிரிவுரைநீயவட்கென்றல்.)

என்னேடுசொல்லுகசெல்லாமையுண்டெனினீரமதி
தன்னேடுமல்குசடையாளர்வெங்கைத்தடஞ்சிலம்பிற்
பொன்னேடுசொல்லுகநீநின்செலவைப்பொருணினைந்து
முன்னேடுபின்னுமிழப்பான்கருதியமுன்னவனே. (உ௬௪)

(நீடேனென்றவனீங்கல்.)

மாணிக்கவாசகன்செந்தமிழ்மாலைமணக்குமுடி
வேணிக்கடவுளிடவாகியதிருவெங்கையன்னு
யாணிக்கநகமனையாள்செயமேங்கறிந்துசெல்வேன்
பாணிக்குமாறிருந்தாலெனைப்போலிலைப்பாவிகளே. (உ௬௫)

(பாங்கிதலைவிக்கவன்செலவுணர்த்தல்.)

இருளாலயமன்னவார்குழலாய்நம்மிறைவரின்று
வெருளாலமுண்டதிருவெங்கைவாணர்தம்மெல்லடியை
யருளாலலதெய்தலாகாதவாறெனவானேமிசைப்
பொருளாலலதுணையெய்தவொணுதென்றுபோயினரே. (உ௬௬)

(தலைவியிரங்கல்.)

பொழியுமருளுடையார்வெங்கைவாணர்பொருப்பருவி
விழியுமெலிவும்பசப்பூர்முலையுமவ்வின்மதனு
லழியுமநமுமறிந்திலராயினுமாவொருபென்
பழியுநினைந்திலரோபொருண்மேற்சென்றபாதகரே. (உ௬௭)

(தலைவியைப்பாங்கிகொடுஞ்சொற்சொல்லல்.)
அரியாரறிதற்கரியார்திருவெங்கையாயிழையாய்
பிரியார்பிரியப்படாரிலையோநின்பெருமணக்குக்
கரியார்பொருடரச்சென்றார்பொருட்டுக்கயன்மருட்டும்
வரியார்கண்ணீர்மல்கவென்னைகொலோநின்றுமாழ்குவதே. (௨௬௮)
(தலைவிகொடுஞ்சொற்சொல்லல்.)
நீடறிவாய்நின்றவெம்மான்றிருவெங்கைநேரிழையாய்
பீடறிவாய்நம்முயிரனையார்தம்பெரும்பணிநீர்
நாடறிவாய்பொருணச்சியிப்போதுநடந்தகொடுங்
காடறிவாய்துணிந்தாயுனைப்போலிலைக்கன்னெஞ்சமே. (௨௬௯)
(வருகுவர்மீண்டெனப்பாங்கிவலித்தல்.)
வலையிற்படுகலைகண்டிளமான்பிணைமாழ்கிநிற்கு
நிலையிற்படர்வநஞ்சென்றநங்காதலர்நெஞ்சுருகிக்
கொலையிற்படுமழுவார்வெங்கைமாதுன்குளிர்தாள
மலையிற்படர்தரம்பீர்மீளமீண்டுவருகுவரே. (௨௭௰)
(பருவங்கண்டுபெருமகள்புலம்பல்.)
பூட்டாதவில்வளைத்தார்த்தாங்கிடித்துப்புயலெழுந்து
தீட்டாதவம்புபொழியுமிக்காலந்தெரிந்திலரோ
காட்டாதநன்னிலையார்வெங்கைவாணர்கனகவெற்பி
லீட்டாதபொன்னனையாயகன்றார்பொருளீட்டுதற்கே. (௨௭௧)
(இகுளைவம்பென்றல்.)
வெயிலேயெனமணிகண்டிதழ்கூம்பிவிரைக்குவளை
துயிலேபுரியுஞ்சுனைவெங்கைவாணர்சுடர்க்கிரியின்
மயிலேயுளங்கவலேலிதுதான்மழைவம்பொடிங்கிக்
குயிலேமறுபருவத்தாற்பொழிதருங்கொண்டலன்றே. (௨௭௨)
(இறைமகண்மறுத்தல்.)
கொங்கைப்பசப்பெனக்கொன்றைகள்பூத்தகுருகொழிந்த
வங்கைத்தலமெனத்தோன்றியுந்தோன்றினவன்னவயல்
வெங்கைப்பதியிற்பழமலைநாதர்மிடறெனவே
மங்கைப்பருவத்தணங்கேமுகிலெழும்வம்பலவே. (௨௭௩)
(அவர்தூதாகிவந்தடைந்ததிப்போதெனத்துணைவிசாற்றல்.)
இணர்வார்சடைமுடியார்வெங்கைவாணரிமயவெற்பிற்
புணர்வார்முலையிளமென்கொடியேநம்புலம்புறநோ
யுணர்வார்பொருளொடும்வந்தாரொன்றேனையுரைத்துமுகில்
வணர்வார்குழலெழில்வாங்குதல்வேண்டிமுன்வந்ததுவே. (௨௭[illegible])
(தலைமகளாற்றல்.)
பொருநாண்மதனைபழித்தேயிமயப்பொருப்பின்மணத்
திருநாளதிற்றரும்வெங்கைபுரேசர்செழுஞ்சிலம்பிற்

கருநாண்மலர்விழிமாதேயென்றுரையினுங்காதலரீங்
கொருநாள்வருவரொன்றேநின்றதாவியுடலகத்தே. (உஎரு

(அவனவட்புலம்பல்.)

ஓடுந்தடங்கண்மணற்கேணியாகவவ்வூற்றிறைக்கு
நீடும்புளினமுலையாக்குறைவுநிறைவுமின்றிச்
சூடும்பிறையர்திருவெங்கைவாணர்சுடர்க்கிரிமேற்
பாடுஞ்சுரும்பலர்மொய்குழறேம்பிப்பதைத்திடுமே. (உஎசு)

(பாகனொடுசொல்லல்.)

வார்கொண்டமென்முலையாளிடையேபொய்வருவலென்னுங்
கார்கொண்டவென்னிடையில்லைபொய்யென்னக்கடுக்கைநறுந்
தார்கொண்டசெஞ்சடையார்வெங்கைவாணர்தனதருளாற்
றேர்கொண்டசீர்வலவாவிரைந்தேகச்செலுத்துகவே. (உஎஎ)

(மேகத்தொடுசொல்லல்.)

சென்னிப்பிறையர்திருவெங்கைவாணர்செழுஞ்சிலம்பின்
மன்னிப்படருங்கொடிபோறமைந்துமலர்வதன்றெங்
கன்னிப்பசுங்கொடிவாடுங்கண்டீர்மெய்க்கருகின்று
மின்னிப்பொழியிலெனையன்றுபோய்க்கருமேகங்களே. (உஎஅ)

(பாங்கிவலம்புரிகேட்டவன்வரவறிவுறுத்தல்.)

தெண்ணீர்முடியர்திருவெங்கைவாணர்செழுஞ்சிலம்பிற்
புண்ணீர்முழுகுமிலைவேலிறைவர்பொற்றேரின்மிசைப்
பண்ணீர்மொழியணங்கேகிளர்ந்தார்க்கும்பணிலமுன்றன்
கண்ணீர்வழியடைத்தற்குரித்தாகியகல்லெனவே. (உஎகூ)

(வலம்புரிகிழத்திவாழ்த்தல்.)

வேயின்கவின்புனைதோளுமைபங்கர்தம்வெங்கைநகர்க்
கோயின்முன்னம்புகுஞ்சங்கெனவாழ்கநங்கொண்கசுரம்
போயின்றணைவலெனவோதியமொழிப்பொய்ம்மைபடா
வாயின்புகழ்திரண்டாலெனவார்க்கும்வலம்புரியே. (உஅ௦)

(தலைவன்வந்துழிப்பாங்கினைத்தமைவினவல்.)

அம்மையிடத்தர்திருவெங்கைவாணரணிவரையெங்
கொம்மைமுலைத்தலமெல்லாம்பசலைகொளக்கொடுத்துச்
செம்மைமநத்திற்பொருள்விழைந்தார்தரச்சென்றவிடத்
தெம்மைநினைத்ததுண்டோவிலையோசொல்லிறையவனே. (உஅக)

(தலைவனினைத்தமைசெப்பல்.)

புறந்தாழ்குழலுமைபங்காளர்வெங்கைபுரத்தாயன்
பறந்தாலுமென்னென்றிருக்கின்றவேணிப்பரமர்தமைத்
துறந்தார்மநமெனவெங்கொடுங்காட்டுச்சுரத்திடைநான்
மறந்தானினைத்தலுமுண்டுபொன்னேயுங்கள்வஞ்சியையே. (உஅஉ)

(பாங்கிதலைவியையாற்றுவித்திருந்தமைகூறல்.)
விண்மணிபொய்ப்பினும்பொய்யாநின்வாய்மைவிளம்பியெங்கள்
கண்மணியொத்தசெவ்வேலிறைவாவுயிர்காத்தளித்தே
னெண்மணிகண்டத்தொருவெங்கைவாணருயர்சிலம்பிற்
பெண்மணியைப்பிறைவாணுதலீர்ங்குழற்பேதையையே. (௨௮௩)

(வரைவுமலிவு.)

(காதலன்முலைவிலைவிடுத்தமைபாங்கிகாதலிக்குணர்த்தல்.)
மலைவிலையென்றநிலைவெங்கைவாணர்மணிவரைமே
லிலைவிலையிந்தமணிக்குமுலைக்குமென்றெண்ணியொரு
கொலைவிலைவென்றநுதன்மடவாய்நங்கொழுநர்முகிழ்
முலைவிலைநல்கினாத்தலைநாகமுழுமணியே. (௨௮௪)

(காதலிநற்றாயுள்ளமகிழ்ச்சியுள்ளல்.)
நான்றசடிலத்திருவெங்கைநாயகனல்குமொரு
கான்றகுருதிக்குடர்மாலைவேலுடைக்காளையெழில்
போன்றவுருவத்திறைவர்மென்றோளிடுபூந்தொடைகள்
ஊன்றபொழிதிற்பெரிதுவவாநிற்குமெம்மனையே. (௨௮௫)

(பாங்கிதமர்வரைவெதிர்ந்தமைதலைவிக்குணர்த்தல்.)
புரவலரொக்குங்குடிவாழும்வெங்கைபுரத்தரிந்தீ
வரவலரொக்குமிடற்றார்தங்கையிளமான்விழியா
யிரவலரொக்குமிறையோன்முலைவிலையின்மொழியாற்
றரவலரொக்குமெதிர்புகுந்தார்க்குந்தடமுரசே. (௨௮௬)

(தலைமகளுவகையாற்றாதுளத்தொடுகிளத்தல்.)
வில்லுங்கணையுமதவேளுமாயவிழித்தவரொஞ்
சொல்லும்புனையுந்திருவெங்கைவாணர்சுடர்க்கிரிமேற்
சொல்லுந்துயரமுலைமேற்பசப்பினைக்கொண்டுநெஞ்சே
செல்லுஞ்செலவையுணர்த்தியதாமிச்செழுமுரசே. (௨௮௭)

(தலைவனைப்பாங்கிவாழ்த்தல்.)
கணத்தினிலங்குமதிப்பிள்ளையொன்றிளங்கட்செவியின்
பணத்தினுறங்குஞ்சடையாளர்வெங்கைப்பணிவரைமேற்
குணத்தினுயர்ந்தகொடியிடைபாவிகொடுப்பதற்கா
மணத்தினலங்கல்புனையுங்காதலர்வாழியவே. (௨௮௮)

(தலைவிமணம்பொருட்டாகவணங்கைப்பராநிலைகாட்டல்.)
நிலமாதலைநிகர்வெங்கையுளான்றருநீமுன்மெய்
குலமாதினைமணஞ்செயதாங்கெனையுங்கொழுநர்வந்து
கலமாமனைப்புணர்ந்தால்விழவாற்றுவனெனவே
பலமாதருந்தொழும்பாவைசெவ்வேளைப்பரவுறுமே. (௨௮௯)

(பராநிலைகண்டதலைமகன்மகிழ்தல்.)
மால்பற்றியபொழில்வெங்கைபுரேசர்மணிவரைமேற்
சேல்பற்றியவிழியாளுலகோர்முனஞ்செங்கையினுற்

கால்பற்றியம்பியின் மீதேயிருத்தற்கடைப்பிடித்து
வேல்பற்றியதெய்வகுளாமணியினைவேண்டுறுமே. (உகூ0)

(அறத்தொடுநிற்றல்.)

(கையறுதோழிகண்ணீர்துடைத்தல்.)

கோலம்புனைதலிற்குற்றமின்றாய்மலர்க்கொய்துவருங்
காலந்தவறிலபந்திடைத்தோல்வியுங்கண்டிலமா
லாலந்திகழ்மிடற்றூர்வெங்கைநாட்டுவதம்புயத்தி
னீலஞ்சிறுமுத்துதிர்ப்பதென்னேசொன்னெடுந்தகையே. (உகூக)

(தலைமகள்கலுழ்தற்காரணங்கூறல்.)

தெண்ணீர்முடியர்திருவெங்கைவாணர்செழுஞ்சிலம்பிற்
பண்ணீர்மைமென்மொழிப்பாவைநல்லாயிப்படிமுழுது
மெண்ணீர்மையன்பரைக்கண்டனமால்வந்ததென்றனது
கண்ணீர்கொடுமென்முலைமேற்பசப்பைக்கழுவுற்றதே. (உகூஉ)

(தலைவன்றெய்வங்காட்டித்தெளிப்பத்தெளிந்தமைகூறல்.)

கொலைசூழ்குருகுமொன்றுண்டாற்கரிநெறிகூறுமெனி
லிலைசூழ்மனையின்முநிவரெல்லாந்தொழுமெங்கள்பழ
மலைசூழ்மறுகெழில்வெங்கைநன்னாடர்மநந்தெளியச்
சிலைசூழ்வநந்திகழ்தெய்வதங்காட்டித்தெளித்ததற்கே. (உகூ௩)

(இறைவிதலைவனிகந்தமையியம்பல்.)

முனங்குழையாதமலைகுழைத்தாரம்முதல்விகந
தநங்குழையாதுகுழைந்தார்தம்வெங்கைத்தடஞ்சிலம்பிற்
கநங்குழையாயுனக்கீந்தாரிலைகொனங்காவலனார்
மநங்குழையாமன்முனந்தாமருந்துமருந்திணையே. (உகூச)

(பாங்கியியற்பழித்தல்.)

உழைகாதலிக்குங்கரத்தார்நிறைமதியொத்தசங்கக்
குழைகாதிற்பெய்பவர்தென்வெங்கைவாணர்குளிர்சிலம்பின்
மழைகாதலிக்குங்கொடையன்பர்மேற்பிறர்வாயுரைக்கும்
பிழைகாதிற்கேட்பவந்தோபடைத்தானயன்பெண்பிறப்பே. (உகூரு)

(தெய்வம்பொறைகொளச்செல்குவமென்றல்.)

புற்றங்கதமணிவெங்கைபுரேசர்பொருப்பிலெங்கள்
சுற்றந்தொழுமெங்கொழுநர்நிற்காட்டிமுன்சூளுரைத்த
குற்றம்பொறுத்தருளென்றடிபோற்றிக்கொழுமலர்தூய்ச்
செற்றந்தணிக்குதும்பெண்ணேயினிக்குலதெய்வத்தையே. (உகூசு)

(இயல்வயிற்செறித்தமையியம்பல்.)

சுட்டாவறிவுருவானரவ்வானிற்சுரர்தமக்குங்
கிட்டாவமுதனையார்வெங்கைவாணர்கிரியணங்கே
மொட்டாமுலையிற்பசலைகண்டேமனைமுன்றில்விடா
ளிட்டாளிலைவிலங்கென்பதொன்றேகுறையின்றவட்கே. (உகூஎ)

(செவிலிகனையிருளவன்வரக்கண்டமைகூறல்.)
மீனைக்கடந்தபொழில்சூழரன்றிருவெங்கைவெற்பர்
கானைக்கடந்துகுறிவாயிருள்வரக்கண்டனள்பாய்
மானைக்கடந்தவிழியாடரளமணிவடத்த
வானைக்கடந்தவிளஞ்சிங்கமோவென்றயிர்த்தனளே. (உகூஅ)
(எறிவனோவேற்றுமைக்கேதுவினுதல்.)
கநம்வேறுபட்டமிடற்றார்தம்வெங்கைக்ககவெற்பிற்
புனம்வேறுபட்டிங்குவந்தவன்றோநம்புரிகுழற்குத்
தநம்வேறுபட்டுவிழிவேறுபட்டுத்தளர்ந்துமொழி
மநம்வேறுபட்டதென்னோவுரையாய்செவ்வரிக்கண்ணியே. (உகூகூ)
(பாங்கிவெறிவிலக்கல்.)
வீட்டையுவந்துதருவார்திருவெங்கைவெற்படுத்த
காட்டைவிரும்பியுறைதெய்வமேயெங்கள்கந்நிபடும்
பாட்டைநினைந்திலைவாளாவுலகிற்பலர்விரும்பு
மாட்டைவிரும்பினைநன்றோவிதுசொல்லறிவினுக்கே. (௩00)
(வெறிவிலக்கியவழிசெவிலிபாங்கியைவினுதல்.)
மின்னேடுவமிக்குஞ்செஞ்சடையார்திருவெங்கைவெற்பிற்
பொன்னேய்விலக்குவமென்றெண்ணியாங்கள்புகும்பொழுதி
லென்னேவெறிவிலக்குற்றாயிளமுலையேந்திழையா
டன்னேபறிந்தனையேலுரையாய்மைத்தடங்கண்ணியே. (௩0க)
(பூத்தருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.)
தடுக்கநிறைபுனற்பண்ணையிற்சூன்முதிர்சங்கம்வந்து
படுக்கநளினமலர்வெங்கைவாணர்பணிவரைமே
லுடுக்கவுதவினன்மாந்தழைமாமலரொண்ணுதற்குக்
கொடுக்கமதனைவிடுத்தகன்றுனொருகோமகனே. (௩0உ)
(புனறருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.)
வான்கற்றவண்புகழ்வெங்கைபுரேசர்மணிவரைமேற்
றான்கற்றகல்விதளர்வுதவுந்தகையெனவே
தேன்கற்றமென்மொழியாள்வருநீரொடுசெல்பொழுதி
லூன்கற்றவேலுரவோனொருவேந்தனுதவினனே. (௩0௩)
(களிறுதருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல்.)
ஐங்கைக்களிறுதரும்வெங்கைவாணரணிவரைமேல்
வெங்கைக்களிறுதனைப்பாய்வுறவரமெய்ந்நடுங்கிக்
கொங்கைக்களிறுபுறம்பாய்வுறப்புல்லிக்கொண்டனள்வேற்
செங்கைக்குமரனையன்னுனொருவனைத்தேமொழியே. (௩0௪)
(மணம்விலக்கல்.)
வந்தித்திருவிழியார்வெங்கைவாணர்மணிவரைமே
லிந்தித்திலவடநல்கின்றதேயன்றியேதிலர்க்குக்

கந்திக்குமரிமண்முடையர்ளல்லள்காண்டகைய
சென்னிக்கணிமுடிதாட்கணியாகுஞ்செயலில்லையே. (ஙாரு)
(மின்னிடைவேற்றுமைகண்டுநற்றாய்செவிலியைவினுதல்.)
நெடுங்கோவளவயல்வெங்கைபுரேசனாநெஞ்சிருத்தாக்
கொடுங்கோலரசர்குடைக்கீழடங்குங்குடியெனவே
யிடுங்கோல்வளைவிழிநீரொழியாமலிருப்பதென்றோ
வடுங்கோல்புனைவிழிவெண்முத்தவாணகையாயிழையே. (ஙாசு)
(செவிலிநற்றாய்க்குமுன்னிலைமொழியாலறத்தொடுநிற்றல்.)
புலங்கண்டளவின்மறைவெங்கைவாணர்பொருப்பிடைச்செந்
நிலங்கண்டளவினுறைதிரிந்தாங்கொர்நெடுந்தகைதன்
னலங்கண்டளவினலந்திரிந்தாண்மென்னகின்மிசையோர்
கலங்கண்டளவின்மிகநோமருங்குலுன்காரிகையே. (ஙாஎ)
(நற்றாய்தமருக்கறத்தொடுநிற்றல்.)
வேலோடுவாளும்பயின்மர்காணம்விளங்கிழையைப்
பாலோடுதேன்கலந்தாங்கிளவாளைப்பணைமருதச்
சேலோடுபாயுந்திருவெங்கைவாணர்சிலம்பினெடு
மாலோடுமோனுமொருவேலவற்குமணஞ்செயுமே. (ஙாஅ)
(உடன்போக்கு.)
(பாங்கிதலைவற்குடன்போக்குணர்த்தல்.)
தாயிற்சிறந்ததிருவெங்கைவாணர்தடஞ்சிலம்ப
போயிற்பொழுதுவருவலென்றேகிற்பொறுக்கறியா
டையிற்புழுவெனவேபதைப்பாணின்றிருவருளா
னீயித்திருவையுடன்கொடுபோயின்னெடுநகர்க்கே. (ஙாகூ)
(தலைவனுடன்போக்குமறுத்தல்.)
அனிச்சமுமன்னத்தின்றூவியுமாதரடிமலர்க்குச்
சனித்தநெரிஞ்சிப்பழமென்றறிந்துந்தகுவரன்றி
மனித்தர்வழங்கரும்வெங்கொடும்பாலைவழியொருநா
ளினித்தமொழியுடையாளையெவ்வாறுகொண்டேகுவனே. (ஙாய)
(பாங்கிதலைவனையுடன்படுத்தல்.)
துணையிற்புணர்களிவண்டினம்பூந்தண்டுளைர்பொதுளும்
பணையிற்றுயில்பொழில்வெங்கைபுரேசர்பனிவரையாய்
பிணையிற்பிறழ்கருங்கண்ணாட்குநின்னைப்பிரிந்தமல
ரணையிற்கொடியதுவோவையநீசெல்லழற்சுரமே. (ஙகக)
(தலைவன்போக்குடன்படுதல்.)
நாமொழியாதுபுகழ்வானருள்வெங்கைநாதனைச்சொற்
பாமொழியானெய்தலாம்பாலைஞானசம்பந்தனுக்குத்
தேமொழியாயுன்னுயிரனையாட்கருஞ்செம்பவள
வாய்மொழியாலிளங்காவாகும்பட்டமரங்களுமே. (ஙகஉ)

(பாங்கிதலைவிக்குடன்போக்குணர்த்தல்.)
தேவியுஞ்சம்புவுநீங்காதவெங்கைச்செழுஞ்சிலம்பர்
காவியுங்கஞ்சமுமாம்பலும்பூத்துக்கவின்கனியும்
வாவியும்பெண்ணணங்கென்றூர்கதிர்தெறும்வன்சுரத்திற்
காவியுங்கண்ணுமமுதமும்போன்றொளிராரணங்கே. (௩௧௩)

(தலைவிநாணழிவிரங்கல்.)
ஊணிலையாகஞ்சுண்டோன்றிருவெங்கனூரனைய
வாணிலையாகுமதர்விழியாய்முன்வனைந்திருந்த
பூணிலையாகுமவயவம்போலப்பொலிவழிவார்
நாணிலையாகிற்றதுவாற்பயனென்னைநங்கையர்க்கே. (௩௧௪)

(கற்புமேம்பாடுபூண்முலைப்பாங்கிபுகறல்.)
சேண்போலுமேனியர்தென்வெங்கைவாணர்செழுஞ்சிலம்பிற்
பாண்போலுமென்மொழிச்செந்துவர்வாய்மலர்ப்பாவையன்னாய்
பூண்போலுநாண்முதலெல்லாமுமங்கலப்பூங்கழுத்தி
னூண்போலுமாணுறுங்கற்பொன்றுமேகுலநாரியர்க்கே. (௩௧௫)

(தலைவியொருப்பட்டெழுதல்.)
நரைப்பால்விடையர்பிறைபார்சடையர்மெய்ஞ்ஞானமயர்
வரைப்பாவைபங்கர்திருவெங்கைவாணர்மணிவரைமே
லுரைப்பாருரைப்பவையெல்லாமுரைக்கவுனக்கிசைவேற்
றிரைப்பாவையேசெல்லுவேனன்பரோடருந்தீச்சுரமே. (௩௧௬)

(பாங்கிசுரத்தியல்புரைத்துழித்தலைமகள்சொல்லல்.)
மாவோவெனுங்கறைக்கண்டர்வெங்கேசர்மணிவரைமே
லேவோவெனுங்கண்ணிளங்கொடியேமதனெய்யுநறும்
பூவோபயில்வெண்மதியோகதிர்கொளும்பூங்குயில்வாழ்
காவோவிறைவருடனேபுகுங்கள்ளிக்காடெனக்கே. (௩௧௭)

(பாங்கிகையடைகொடுத்தல்.)
இறந்தார்பிறந்துழலாதேமுதுகுன்றியற்றுசெயல்
சிறந்தார்புகழ்வெங்கைசெய்வானருளுஞ்சிவனுமையை
யறந்தானுருவுகொண்டன்னான்வசிட்டனருந்ததியைத்
துறந்தாலுநீதுறவேலையனேநின்றுணைவியையே. (௩௧௮)

(பாங்கிவைகிருள்விடுத்தல்.)
வெங்கேதகைமுனிவார்வெங்கைவாணர்தம்வெற்பிலன்னே
யெங்கேமகளென்றிறுப்பாள்வட்குன்னியல்பதனை
யிங்கேயிருந்துரைத்தோரிமைப்போதினுளெப்படியு
மங்கேவந்துன்னொடுகூடுவனன்மலராரணங்கே. (௩௧௯)

(தலைமகளைத்தலைமகன்சுரத்துய்த்தல்.)
கொடும்பாவிகளுமொருமாதவப்பயன்கொள்வரோண
நெடும்பார்மிசையின்றறிந்தாம்விழிபொழிநீர்பெருகச்

சுடும்பாலையிலுன்றிருவடித்தாமரைதோய்ந்தமையா
லடும்பாதகஞ்சமுண்டமைவார்வெங்கையாரணங்கே. (௧௨௦)

(தலைமகன்பொழில்கண்டுவியத்தல்.)

பிறப்பரம்வநம்புக்குழல்வார்தமக்குப்பெரிது முன்செய்
யறப்பாலுதவுந்திருவெங்கைவாணரடிநிழல்போ
லுறப்பாலைசெய்துயரெல்லாமொழியவொளியிழைதாழ்
நிறப்பாரமென்முலையாய்பொழிலோவொன்றுநேர்ந்ததுவே. (௧௨௧)

(தலைமகன்றலைமகளைசவறிந்திருத்தல்.)

ஆடும்பதத்தர்திருவெங்கைவாணரதிகபுகழ்ப்
பாடுங்குமுதம்புனலூறவேயப்பருதியினால்
வாடுங்கமலமுகவேர்புலரமலர்ந்துதென்ற
லோடுங்குளிர்தண்பொழிற்கேயிருந்தருளொண்ணுதலே. (௧௨௨)

(உவந்தலர்சூட்டியுண்மகிழ்ந்துரைத்தல்.)

எண்ணியவெண்ணமுடிப்பார்தம்வெங்கையிமயவெற்பி
னுண்ணியநூன்மருங்குற்கனிவாய்வின்னுதலியுன்றன்
மண்ணியநீலமணிவார்குழலின்மலர்புனையப்
பண்ணியபுண்ணியமுன்னமென்னேவென்றன்பாணிகளே. (௧௨௩)

(கண்டோரயிர்த்தல்.)

நந்தனும்வெள்ளைமதகரிவேந்துநறியவர
விந்தனுமுள்ளங்கசிந்தேத்தும்வெங்கைவிமலர்தருங்
கந்தனும்வள்ளியுமோவறியேமிந்தக்காளையெழின்
மைந்தனும்வள்ளிதட்போதணிவார்குழன்மங்கையுமே. (௧௨௪)

(கண்டோர்காதலின்விலக்கல்.)

தாதையனையதிருவெங்கைவாணர்தடஞ்சிலம்பிற்
சீதையொடுவருமாலனையாயித்திருந்திழையாள்
கோதைவெயிலிடைப்பட்டனையாளெங்குடி லில்லைவகி
மாதையுடன்கொண்டுநாளையுன்னூர்க்குவழிக்கொள்கவே. (௧௨௫)

(கண்டோர்தன்பதியணிமைசாற்றல்.)

பணியேறியசெஞ்சடைவெங்கைவாணர்பனிவரைமேற்
கணியேறுமாவிற்படர்கொடிமீதுகழனிவளை
யணியேறுவேழம்பர்போலேதவழுமணிநகர
மணியேறுதோளண்ணலேயுங்கண்மாடவளநகரே. (௧௨௬)

(தலைவன்றன்பதியடைந்தமைதலைவிக்குணர்த்தல்.)

பன்னகர்கின்னரமன்னவரென்றும்பரவுவெங்கை
நன்னகர்தன்னகரொன்னுமெம்மான்கிரிநன்னுதலாய்
பொன்னகரொந்நகரிந்நகர்முன்னெனப்போற்றலுறு
மிந்நகரொன்னகர்கின்னகராகவெழுந்தருளே. (௧௨௭)

(செவிலிபாங்கியைவினுதல்.)
சொன்மாதுதன்புகழ்யாழிலிட்டேத்தித்தொழுமிமய
நன்மாதுபங்கர்திருவெங்கைவாணர்நன்னுடனேயா
யென்மாதுசென்றவிடமேதறிந்திலனின்முழுதும்
பொன்மாதுசென்றமனேபோற்பொலிவறப்புல்லென்றதே. (௩௨அ)

(பாங்கிசெவிலிக்குணர்த்தல்.)
சாந்தந்தருபவர்வெங்கைபுரேசர்தடஞ்சிலம்பிற்
சேந்தங்கயல்விழிநீர்மல்கவேநின்றுதேம்புமன்னே
காந்தந்தொடர்கரும்பொன்போலவின்றுதன்காந்தனேக்கண்
டேந்தங்கலமுலேச்செம்பொன்னனுடொடர்ந்தேகினளே. (௩௨௯)

(செவிலிதேற்றுவோர்க்கெதிரழிந்துமொழிதல்.)
அனேயேயனேயவருளாளர்வெங்கையணிவரைமே
லினேயேலெனவெனக்கோதிநிற்பீரொன்னேப்போலவொரு
புனேயேடவிழ்மலர்க்கோதையைப்பாலேயிற்போக்கினின்ருல்
வினேயேறுறுதுயரெல்லாமுமக்குவெளிப்படுமே. (௩௩0)

(செவிலிதன்னறிவின்மைதன்னேநொந்துரைத்தல்.)
புன்ருேலுடையர்திருவெங்கைவாணர்பொருப்பண்ங்கு
வன்ருேளிராமனெடுசீதைதங்கண்மனேகடந்து
சென்ருேர்வநம்புகுந்தாளென்பர்மாசிறெரிவையர்க்கு
நன்ருேவதுபிழைகாணேவென்ருளதுநாடிலனே. (௩௩௧)

(செவிலிதெய்வம்வாழ்த்தல்.)
செடிமுழுதும்புலிதுஞ்சுபொல்லாதவெந்திச்சுரத்தி
லடிமுழுதுஞ்செம்புனல்பாய்ச்சென்றவளங்குவந்தாற்
படிமுழுதும்புகழ்வெங்கைபுரேசர்தம்பாலனுக்கெங்
குடிமுழுதுந்தொழும்பாளாகவோலேகொடுக்குதுமே. (௩௩௨)

(செவிலிநற்றுய்க்கறத்தொடுநிற்றல்.)
வேலேத்தரளமுமைந்தலேநாகவியன்மணியுஞ்
சோலேச்செழுமலரும்போலநம்மைத்துறந்துமெல்ல
மாலேக்குழலிதனக்குரியானேமணந்துசென்ருள்
பாலேப்பொருமொழிபங்கர்வெங்கேசர்பனிவரைக்கே. (௩௩௩)

(நற்றுயயலார்தம்மொடுபுலம்பல்.)
பொன்போலொருபெண்டிருவெங்கையானருள்பூண்டுபெற்ருே
ரென்போலிலேயுலகம்பதினுன்கினுமிப்பொழுது
துன்போடழுங்குமவருமென்போலிலேச்சோகமுறே
லென்போரறிகுவரோர்வறியாரிவ்விரண்டையுமே. (௩௩௪)

(நற்றுய்தலேமகள்பயிலிடந்தம்மொடுபுலம்பல்.)
ஆவிக்குரியர்திருவெங்கைவாணரணிவரைமேன்
மேவிக்குடையுஞ்சுனேயேமலர்கொய்யுமென்பொழிலே
வாவிக்குமுதமலர்வாய்சிறிதுமலர்ந்துபெற்ற
பாவிக்குரையுமென்றென்சொல்லிப்போயினள்பாதகியே. (௩௩௫)

(நிமித்தம்போற்றல்.)
பாவிரிமாபுகழ்வெங்கைபுரேசர்பணிவரைமேற்
பூவிரிவான்பொழில்காப்பதற்காகப்பொருதிரைத்தன்
காவிரிமாதைவருவித்தகாக்கையுங்காக்குங்கொலோ
மாவிரிமாகுழலனன்மாதையிங்குவரவழைத்தே. (௩௩௬)

(சுரந்தணிவித்தல்.)
சங்கலைத்தொண்புனலூர்வயலுவற்றலைவனுக்குச்
செங்கலைப்பொன்செய்தமெதன்வெங்கைவாணர்திருவருளாற்
பொங்கலைத்தண்புனற்காவிரிநாட்டிற்பொலிகநிறை
யங்கலைத்திங்கள்முகமாதுசென்றவருஞ்சுரமே. (௩௩௭)

(தன்மகண்மென்மைத்தன்மைக்கிரங்கல்.)
நோக்கக்குழையுஞ்சிலையாளர்வெங்கையினுண்ணிடையார்
மோக்கக்குழையுமனிச்சமென்பூவின்முகந்திருத்தித்
தூக்கக்குழையும்பதங்கள்வெம்பாலைச்சுடுபரலி்
ருக்கக்குழையுங்கொலோகுழையாதெங்கடையலுக்கே. (௩௩௮)

(இளமைத்தன்மைக்குளமெலிந்திரங்கல்.)
பேதைப்பருவமிறந்தேபெதும்பைப்பிராயமுறும்
போதைத்தொடங்கிமருண்மாலைபோல்பவள்போனதென்னே
மாதைக்கலந்தவிடத்தார்திருவெங்கைவாணர்வெற்பிற்
கோதைச்செழுங்கதிர்வேல்வேந்தொடுமெக்கொடுஞ்சுரமே. (௩௩௯)

(அச்சத்தன்மைக்கச்சமுற்றிரங்கல்.)
ஆலமெழும்பொழுதவ்வெங்கைவாணர்க்கபயமென
வோலமிடுஞ்சுரர்போலேயப்யமென்றேடுங்கொலோ
ஞாலமிட்ந்துதிரிந்தவக்கோலமுநாணவொரு
கோலமெழும்பொழுதஞ்சிமுன்போந்தகொழுநனுக்கே. (௩௪௰)

(கண்டோரிரக்கம்.)
துன்படுமையர்திருவெங்கைவாணர்சுடர்க்கிரிமேன்
மின்படுநுண்ணிடையாள்விளையாடியமென்பொழிலும்
பொன்மடுமூசலும்வண்டலும்பாவையும்பூவையுங்கண்
டென்படுமோவறியேம்பெற்றதாயென்றிருப்பவளே. (௩௪௧)

(செவிலியாற்றுத்தாயைத்தேற்றல்.)
வெல்லப்படாதவயில்விழியாள்செயல்வேறொன்றன்றிச்
சொல்லப்படாதசெயலாய்முடியிற்றுயர்தனன்றே
வல்லற்படாதியன்னேவெங்கைவாணரருள்கொடுநான்
செல்லப்படாதவிடமேனுஞ்சென்றுதிருப்புவனே. (௩௪௨)

(ஆற்றிடைமுக்கோற்பகவரைவினுதல்.)
தன்னைத்தலைவனைநின்றுங்கறிந்துதவம்புணர்ந்து
முன்னைப்பவந்தொலைத்தீருண்மைகூறுமின்மூரிவெள்ள

மின்னைப்பொருசெஞ்சடையில்வைத்தார்வெங்கைவெற்பிலெங்கள்
பொன்னைக்கரந்தொருகாளைகொண்டேதனிபோயினனே. (௩௪௩)

(மிக்கோரேதுகாட்டல்.)

சேவிற்பிறங்குக்கொடிவெங்கைவாணர்சிலம்பணங்கே
பூவிற்பிறந்தபசுந்தேன்வினைவழிபோந்தணுகு
மாவிற்கலதுமலர்க்கேதுசெய்யுமவ்வாறெனவே
யேவிற்சிறந்தவிழியாணமக்குமென்றெண்ணுகவே. (௩௪௪)

(செவிலியெயிற்றியொடுபுலம்பல்.)

அள்ளியிளந்துபசுந்தாதளியினமம்புயமென்
பள்ளியுறங்குந்திவெங்கைவாணர்பனிவரையாள்
வள்ளிடந்தவழிதூர்ந்திடாதவ்வழிநடந்தாள்
கள்ளிபடர்ந்தசுரத்தேவருமறக்காரிகையே. (௩௪௫)

(செவிலிகுரவொடுபுலம்பல்.)

பூவேபுரியுந்திருவெங்கைவாணர்புனையுமணி
பாவேபுனையுமகலல்குலாளொடனைதுயர
வரவேதகுவதன்றென்றுயிலைமலர்வாய்திறக்குங்
குரவேமொழிநல்குரவேனினக்கதுகூறுதற்கே. (௩௪௬)

(சுவடுகண்டிரங்கல்.)

புலியோடரவுதொழுங்கூத்துடையவர்பூவையர்கைப்
பலியோடுயிர்கவர்வெங்கைபுரேசர்பனிவரைமேன்
மலியோதியினிசைவண்டுபல்பாடுறும்வஞ்சியடி
கலியோர்முனைஞ்செலும்வெள்ளடியோடுகலந்ததுவே. (௩௪௭)

(செவிலிகலந்துடன்வருவோர்க்கண்டுகேட்டல்.)

வேண்டாருயிர்கவர்செவ்வேலிறைவனுமெல்லியலு
மீண்டாரெனவுண்மகிழ்ந்துநின்றேன்மலர்வேதன்முதன்
மாண்டாலொலும்பலனிவெங்கைபுரேசர்மணிவரைமேற்
றூண்டாவிருஞ்சுடர்போல்வருவீரெதிர்தோன்றுறவே. (௩௪௮)

(அவர்புலம்பதேற்றல்.)

என்னூர்பெயரவ்விளங்காளையுமிவ்விலங்கிழையா
டன்னூர்பெயர்நும்பிணைவிழியாளுந்தனிவினவிப்
பொன்னூபுரவடிவஞ்சிபங்காளர்பொருந்துகொடி
மின்னூர்முகிலுறங்கும்பொழில்சூழ்வெங்கைமேவினரோ. (௩௪௯)

(செவிலிபுதல்வியைக்காணாதுகவலைகூர்தல்.)

சேணுடியமதில்வெங்கைபுரேசர்செழுஞ்சிலம்பின்
மாணுவலர்மொழிவார்க்கேதுசொல்வனென்வாய்திறந்து
நாணுதினியெங்ஙன்மீண்டுடனன்னகர்நான்புகுவேன்
காணுமருங்குலொருமாதையாற்றிடைக்கண்டிலனே. (௩௫௰)

(தலைவிசேணகன்றமைசெவிலிதாய்க்குணர்த்தல்.)
கூனும்பிறைபொன்றணிவார்தம்வெங்கைக்குளிர்சிலம்பி
னூனுங்குருகியுந்தோய்வடிவேலனொருவனொடு
மானுங்கயலும்பணிவிழியாளரிமாவழங்கு
கானுங்கரைபொருகான்யாறுங்குன்றுங்கடந்தனளே. (௩௫க)

(தலைவன்றம்மூர்சார்ந்தமைசாற்றல்.)
சேய்விளையாடுந்திருமார்பர்வெங்கைச்செழுஞ்சிலம்பி
னீவிளையாடுஞ்சுனையீதுநாண்மலர்நீபறிப்ப
வீவிளையாடும்பொழிலதுகாணிளமந்திமுதிர்
வேய்விளையாடுமவ்வெற்பேநம்வெற்புவிளங்கிழையே. (௩௫௨)

{தலைவிமுன்செல்வோர்தம்மொடு
தான்வரல்பாங்கியர்க்குணர்த்திவிடுத்தல்.}
வேலையிற்றேன்றுநஞ்சுண்டோன்றிருவெங்கைவெற்பிலளி
சோலையிற்பாடுமெம்மூர்புகுவீரிதுசொன்மினறு
மாலையிற்றேன்றுங்கதிர்வேலவனொடுமோவழங்கு
பாலையிற்போயினமாதுவந்தாளென்றுபாங்கியர்க்கே. (௩௫௩)

(முன்சென்றோர்பாங்கியர்க்குணர்த்தல்.)
வெளிறுந்தரளநகையீரரன்றிருவெங்கைவெற்பிற்
களிறும்பிடியுமுடங்குளைக்கோளரிகண்டுடைந்து
பிளிறுஞ்சுரத்திடைப்புக்கநும்மாதுபிறழுமின்போ
லொளிருங்கதிர்வடிவேலுடையானொடிங்குற்றனளே. (௩௫௪)

(பாங்கியர்கேட்டுநற்றாய்க்குணர்த்தல்.)
கீற்றுப்பிறையர்திருவெங்கைவாணர்கிரியிலன்னே
கூற்றுக்குடித்தவுயிர்மீண்டெனத்தன்கொழுநனொடு
வேற்றுப்புலத்தினின்றுற்றாளெனச்சிலர்மெய்யுரைத்தா
ராற்றுப்படுத்துன்மனத்தேயிருந்தவருந்துயரோ. (௩௫௫)

(நற்றாய்கேட்டவனுளங்கோள்வேலனைவினாதல்.)
கைக்காலசூலத்தர்வெங்கையிலேநங்கடவுடர
முக்காலமுமுணர்ந்திருலகாளுமுடிமன்னவன்
மைக்காவியங்கண்மடமாதுடனெம்மனைவருமோ
தக்கார்புகழ்தம்மனைபுகுமோவொன்றுசாற்றுமினே. (௩௫௬)

(தன்மனைவரைதல்.)

நற்றாய்மனைமயர்வேட்கையிற்செவிலியைவினாதல்.)
மின்னைப்பயந்தவெனக்கோகதிர்வடிவேலொருவன்
றன்னைப்பயந்தவனைக்கோதிருவடித்தாமரையி
லென்னைப்புரந்தவர்வெங்கையன்னாய்மணமேற்றுவக்கு
முன்னேந்தவமெவர்க்கோவறியேம்வந்துமுற்றுவதே. (௩௫௭)

(செவிலிக்கிகுளைவரைந்தமையுணர்த்தல்.)
செவ்வாய்மடமயிறன்னையன்னேமணஞ்செய்திருந்தா
ரவ்வாளரியனையாரொன்றுதூரறைந்தனராற்

சைவாகமந்திகழ்வெங்கைபுரேசர்தடஞ்சிலம்பி
லெவ்வாறறைவதறங்கோடிசெய்துமுன்னீன்றவட்கே. (௩௫௮)

(வரைந்தமைசெவிலிநற்றாய்க்குணர்த்தல்.)

பொன்னாரிதழித்தொடையாளர்வெங்கைப்பொருப்பிலிந்த
நன்னாளினிவருங்காலத்தறாதெனநன்மணஞ்செய்
தன்னாய்வருகின்றனர்மடமாதுடனன்பனொன்று
சொன்னார்மொழிபிறழாதுண்மைகூறுநற்றூதுவரோ. (௩௫௯)

(தலைவன்பாங்கிக் கியான்வரைந்தமை நுமர்க்கியம்புகென்றென்றல்.)

ஊனெழுவாய்மழுவெங்கைபுரேசருயர்சிலம்பிற்
றேனெழுவார்குழலாய்நுமர்தேறத்தெளித்தருள்வாய்
வானெழுமீரமதிவாண்முகத்துங்கள்வல்லிதனை
யானெழுநாவொன்றுசான்றாகச்செய்தவிருமணமே. (௩௬௰)

(பாங்கிதானதுமுன்னேசாற்றியதுரைத்தல்.)

பன்னாளருந்தவஞ்செய்ததன்மாதைப்பணியிமய
நன்னாகநல்கவரைந்தார்திருவெங்கைநாடளிக்கு
மன்னாவெம்மேமவரைவரைமாதைவரைந்தமைதான்
முன்னாவறிந்துபயந்தாடமக்குமொழிந்தனனே. (௩௬௧)

(உடன்போக்கிடையீடு.)

(நீங்குங்கிழத்திபாங்கியர்தமக்குத் தன்செலவுணர்த்திவிடுத்தல்.)

வெறிமேவுகொன்றையம்பூந்தொடையார்திருவெங்கைவெற்பிற்
கறிமேவுமுப்பெனவன்பரிற்கூடிவெங்கானகத்தி
னெறிமேவுமங்கைமகிழ்ந்துசென்றாளெனநீருரைமின்
மறிமேவுமுன்கண்மடக்கொடிமாதர்க்குமாதவரோ. (௩௬௨)

(தலைமகடன்செல வின்றாட் குணர்த்திவிடுத்தல்.)

மின்னைத்திருத்துமவிர்சடையார்திருவெங்கைவெற்பிற்
பொன்னைப்பரித்ததிருமார்பரோடதர்போயினளென்
றென்னைக்கொடுத்துக்கலங்கவிழ்நாய்கனெனக்கவலு
மன்னைக்குரைத்தருளீர்வழுவாநெறியந்தணரே. (௩௬௩)

(நற்றாய்க்கந்தணர்மொழிதல்.)

அல்லஞ்சுகண்டர்திருவெங்கைவாணரணிவரையீ
ரில்லஞ்சுரமச்சுரமேதனில்லமெனக்கருதி
வல்லஞ்சுமென்முலையாணடந்தாளென்வழிச்செலவைச்
சொல்லந்தணவனைக்கென்றுவெம்பாலைச்சுரத்திடையே. (௩௬௪)

{நற்றாயறத்தொடு நிற்றலிற்றமர்பின்சேறலைத்
தலைவிகண்டுதலைவற்குரைத்தல்.}

கல்வளைத்தன்றுபுரமெரித்தார்கருங்காவியங்கட்
பல்வளைச்செங்கைக்கொடிபாகர்வெங்கைப்பனிவரையாய்
வில்வளைத்தம்புபொழிந்தார்த்தெழுந்துவியன்சிலம்பைச்
செல்வளைப்புற்றதுபோல்வளைந்தாரொமர்தேரினையே. (௩௬௫)

(தலைமளைத்தலைமகன்விடுத்தல்.)

செருகிக்கிடந்தமதிவேணியர்திருவெங்கைவெற்பிற்
சருகிற்புகுஞ்சுழல்காற்றாகுவன்பகைச்சார்வினரோ

குருகிற்சிறந்தகைத்தோகாய்நுமனைக்கொலாமையினு
லருகிற்செலவஞ்சுவேனிற்கநீயிவ்வதரிடையே. (நசுசு)
(தமருடன்செல்பவளவன்புறநோக்கிக்கவன்றரற்றல்.)
கன்மலையென்னினுமவ்வேடர்பெய்யுங்கணைமழைக்கிங்
கென்மலையென்னும்புயத்தோர்க்கிடந்தருமிம்மலைதான்
பன்மலையென்னுமணிமாடவெங்கைப்பழமலைவாழ்
பொன்மலைவெள்ளிமலைபோற்பொலிகபுகழ்படைத்தே. (நசுஎ)
(வரைதல்.)
{சென்றோன்மீண்டுவந்தந்தணரையுஞ்சான்றோரையுமுன்னிட்டு வரைந்துகொண்டுழிக்கண்டோர்மகிழ்ந்துகூறல்.}
கருவேரறுக்குந்திருவெங்கைவாணற்குங்கம்புமைக்கு
மருவேள்விநன்மணஞ்செய்துசெம்பாதிமெய்யாயினவால்
வருவேதநன்னெறிதான்வழுவாமன்மணம்புணர்ந்து
பொருவேலிறைவற்குநன்மாதினுக்குமெய்பூரித்தவே. (நசுஅ)
(இல்வாழ்க்கை.)
(தலைவன்றலைவிமுன்பாங்கியைப்புகழ்தல்.)
கலைகாணரும்புகழ்வெங்கைபுரேசர்ககவெற்பிற்
குலைகாணலைபுனற்பண்ணையினுக்குபைங்கூழ்விளைவுந்
றுலைகாணளவும்வருந்துகின்றாரினென்னெண்டொடைமின்
முலைகாணளவும்வருந்தினைவாழிமுகிண்முலையே. (நசுகூ)
(தலைவனைப்பாங்கிவாழ்த்தல்.)
மால்போலிருக்குமிறைநீயணிந்தநன்மங்கலநாண்
பால்போலிருக்குமொழியாட்குவெங்கைப்பரனணிந்த
சேல்போலிருக்கும்விழிமாதுமையின்றிருக்கழுத்தி
நூல்போலிருக்கப்பெறுகதின்மாதவநோக்கடைந்தே. (நஎய)
{பாங்கிதலைவியைவரையுநாளளவும் வருந்தாதிருந்தமையுரையாயென்றல்.}
போற்றலர்போற்றுங்கதிர்வேலவன்பொன்புனையளவு
நீற்றலர்மேனியர்வெங்கையிலேயுண்ணிரம்புசெந்தே
னூற்றலரொன்றிற்கொடிநுசுப்பாயிவ்வுலகநிறை
தூற்றலரொன்னைநீசுமர்தாற்றினைசொல்லுகவே. (நஎக)
(பெருமகளுணர்த்தல்.)
வினைக்கூறுசெய்தன்றிருவடித்தாமரைமேவுறவென்
றனைக்கூவுமைபர்திருவெங்கைவாணர்தடஞ்சிலம்பின்
முனைக்கூரயில்விழியாயின்றுகாறுமுதல்வருட
னெனைக்கூறிடுமலரோதுணையாகவிருந்தனனே. (நஎஉ)
(தலைவனைப்பாங்கிவரையுநாளளவுநிலைபெறவாற்றியநிலைமைவினுதல்.)
வேலைதருவிடமுண்டோன்றிருவெங்கைவெற்பிலெழு
காலையிரவியனையாயெவ்வாறுகனலிமுனஞ்

சோலையிளமயிலன்னாள்கழுத்திற்சுரும்பூரான்
மாலையிடுமளவும்பொறுத்தாய்மலர்வாளியையே. (௩எ௩)
(மன்றன்மனைவருசெவிலிக்கிருவரையன்புறவுணர்த்தல்.)
இலருமுளருமலர்வெங்கைவரணரியயவெற்பி
லலருமலருமலர்த்துவெய்யேமகளேன்றற்கொன்று
மலருமிருபொருளுண்டாயின்மங்கைக்குமன்னவற்கும்
பலருமிசையவொப்பாருமன்னேயிப்படியகத்தே. (௩எச)
(பாங்கியில்வாழ்க்கைநன்றென்றுசெவிலிக்குரைத்தல்.)
பல்லறமாற்றியுமெல்லாமொருங்குபடத்துறந்தோர்
நல்லறமாற்றுந்துணையாகவும்பெருநன்மையினு
லல்லறமாற்றுங்களத்தார்திருவெங்கையாரணங்கி
னில்லறமாற்றவுநன்றெனுமாலிவ்விருநிலமே. (௩எரு)
{மணமனைச்சென்றுவந்தசெவிலி
பொற்றொடிகற்பியனற்றாய்க்குணர்த்தல்.}
மெய்யாமிறைவர்திருவெங்கைவாணர்தம்வெற்பில்வளைக்
கையாளுடனவ்வருந்ததிமாதொப்பள்கற்பினென்றுற்
பொய்யாமருங்குலவள்வாழூழூர்க்குப்புயல்களென்றும்
பெய்யாவிவளிடத்திங்கண்மும்மாரியும்பெய்திடுமே. (௩எசு)
(நன்மனைவாழ்க்கைத்தன்மையுணர்த்தல்.)
நாறுஞ்செறியிதழ்த்தாமரைத்தேனுமந்துண்டுகளுஞ்
சேறும்பழனத்திருவெங்கைவாணர்செழுஞ்சிலம்பிற்
பேறும்பெருவிருந்தோடுதன்கேளைப்பிடிகடொறும்
வேறுஞ்சுவைபெறவூட்டிப்பின்றுனுணுமெல்லியலே. (௩எஎ)
(செவிலிநற்றாய்க்கிருவர்காதலையுமறிவித்தல்.)
கருமாமணிகண்டர்தென்வெங்கைவாணர்கைக்கார்முகமா
மொருமாமலையைவலஞ்கொண்டுமாலையுதயவெற்பில்
வருமாதவன்றிருத்தேர்மெய்ம்மைபோலப்புன்மாலையினிற்
செருமாமுகமுறச்சென்றுளுமன்பர்தந்தேர்வருமே. (௩எஅ)
(பரத்தையிற்பிரிவு.)
(காதல்ன்பிரிவுழிக்கண்டோர்புலவிக்கேதுவிதாமவ்விறைவிக்கென்றல்)
வெண்டாமரைமனையார்புகழ்ந்தேத்தான்வெங்கைவயற்
றண்டாமரையையிசைபாடியாடித்தடவும்வரி
வண்டாமெனமடவார்பலர்சூழ்ந்தனர்மன்னவனைக்
கண்டாலனமனையாளூடற்கிங்கிதுகாரணமே. (௩எகூ)
(ஈங்கிதுவென்னெனப்பாங்கிவினுதல்.)
திரியாவருங்கலையார்வெங்கைவாணர்செழுஞ்சிலம்பிற்
கரியானுமார்பிற்றிருமாதுமென்னக்கணவனுரம்
பிரியாதமையுமிக்காலத்திலேமன்பிரிந்தவர்போற்
றரியாதழுங்கினமாதேயுனக்கென்கொல்சார்ந்ததுவே. (௩அய)

(இறைமகன்புறத்தொழுக்கிறைமகளுணர்த்தல்.)
செய்ச்சேதகத்திற்குளிர்நடந்தாங்குசெறிந்தவடு
மெய்ச்சேயிழைக்கொடியன்னார்கடைத்தலைமேயினராற்
கைச்சேரிடபக்கொடியாளர்வெங்கைக்கநகவெற்பின்
மைச்சேல்விழிச்செந்திருவேநம்வாய்தன்மணிவையமே. (௩௮௧)

(தலைவியைப்பாங்கிகழறல்.)
பலமாதருள்வெள்வளையூடுயர்ந்தபழுதில்சலஞ்
சலமாமெனவுயர்மாதேதிருவெங்கைத்தாணுவெற்பி
னலமாமனையறஞ்செய்கடன்பூணுநயன்றிருந்த
குலமாதர்தங்கட்கியல்போதங்கேள்வர்குறைசொல்வதே. (௩௮௨)

{தலைவிசெவ்வணியணிந்துசேடியைவிடுப்புழி
யவ்வணியுழையர்கண்டழுங்கிக்கூறல்.}
நறுவாய்முருகுமிழ்வெண்டாமரையினைகைமதிய
மறுவாயளிமுரல்செய்வெங்கைவாணர்வரைமடவீர்
வெறுவாய்மெல்வார்கட்கவல்கிடைத்தாங்குமுன்விண்ணிலிக
ழுறவார்தமக்கிவ்வரத்தமெங்கேவந்துதவியதே. (௩௮௩)

(பரத்தையர்கண்டுபழித்தல்.)
பரைகவர்பங்கர்மதிவார்சடையர்பணியவளையர்
தரைகவர்வண்புகழ்வெங்கைபுரேசர்தடஞ்சிலம்பில்
விரைகவர்வண்டுதொடர்வெட்சிசூடுமிம்மெல்லியலார்
நிரைகவர்கின்றவரோவறியேமிவர்நெஞ்சகமே. (௩௮௪)

{பரத்தையருலகியலோக்கிவிடுத்தலிற்றலைமகன்
வரவுகண்டுவந்துவாயில்கண்மொழிதல்.}
நாவலரொன்றும்புகழ்வெங்கைவாணர்நன்னாடனையா
ளேவலர்தம்மையெதிர்கண்டபோதிரவியெதிர்
பூவலர்கின்றதெனவேமகிழ்ந்துபுவிபுரக்குங்
காவலர்வந்தனர்தாமேயுலகியல்காப்பதற்கே. (௩௮௫)

(தலைமகன்வரவுபாங்கிதலைவிக்குணர்த்தல்.)
மின்னாகியசெஞ்சடையார்திருவெங்கைவெற்பிலுனை
யுன்னாதகன்றவர்வந்தாரவர்செயலுன்னலைநீ
யின்னாசெய்தாரையொறுப்பதுதானன்மையென்பதெனச்
சொன்னார்புலவரறிந்திலையோபொற்சுடர்த்தொடியே. (௩௮௬)

(தலைவனைத்தலைவியெதிர்கொண்டுபணிதல்.)
அரவிடுங்கங்கணக்கையாளர்கொன்றையுமாத்தியுமே
விரவிடுஞ்செஞ்சடைவேதியனார்திருவெங்கைவெற்பிற்
பரவிடுமெங்கள்விழிப்பாரக்கண்டுன்பதம்பணிய
வரவிடுமங்கையர்பல்லாண்டிருந்துயிர்வாழியவே. (௩௮௭)

(புணர்ச்சியின்மகிழ்தல்.)
நாவுங்கடலமுதொப்பாகுவதன்றுநல்லளிகள்
பூவுண்பொழில்புடைசூழ்வெங்கைவாணனைப்போற்றலுறும்

பாவுஞ்செவிச்சுவையேயெனலாமலர்ப்பாயலினி
லேவுண்கருங்கண்மடப்பாவைநல்கியவின்பினையே. (௩௮௮)
(வெள்ளணியணிந்துவிடுத்துழித்தலைமகன்வாயில்வேண்டல்.)
மலைமகள்பங்கர்திருவெங்கைவாணர்மணிவரைமே
லலைமகளென்னவருமடவார்வெள்ளணியணிந்து
கலைமகளென்னவடைந்தனராலினிக்காணவர்தந்
தலைமகன்மெய்ந்நலங்காண்பானெனையார்தருபவரே. (௩௮௯)
(தலைவிநெய்யாடியதிகுளைசாற்றல்.)
மையாடியதடங்கண்ணொருநன்மகவுயிர்த்து
மெய்யாடியதிருவெண்ணீறழகர்தம்வெங்கையிலே
செய்யாடியநல்வலம்புரியீன்றசெழுமணிபோ
னெய்யாடினநல்வினைப்பயன்மேவுநெடுந்தகையே. (௩௯௰)
(தலைவன்றன்மனத்துவகைகூர்தல்.)
பத்திரதன்மகனின்றேத்தும்வெங்கைப்பழமலையார்க்
கத்திரமன்னவிழியுமையாளயில்வேலவனைப்
புத்திரனென்னும்பொருள்படவின்றிலள்பொன்னுரைத்த
சித்திரமன்னவள்புத்திரற்பூத்துச்சிறந்தனளே (௩௯௧)
(தலைவிக்கவன்வரல்பாங்கியுணர்த்தல்.)
ஆடுந்தொழிலர்திருவெங்கைவாணரணிவரைமேற்
பாடுஞ்சுரும்புபடர்ந்தலர்பூத்தபசுங்கொடியை
நேடும்பணியெனநன்மகவீன்றநினைவிரும்பிக்
கூடும்படிவந்தனர்பிரிந்தேகியகொற்றவரே. (௩௯௨)
(தலைவியுணர்ந்துதலைவனொடுபுலத்தல்.)
பண்காணுறுமென்மொழிப்பங்கர்வெங்கைப்பனிவரையாய்
கண்காதளவுமக்காதேந்திளமுலைகாறுமுள
பெண்காணெனமுன்புணர்த்ததுநீபெறும்பிள்ளைசுவைத்
துண்காலமென்முலைநுண்ணிடைகாறுமுளவென்றதே. (௩௯௩)
(தலைவிபாணனைமறுத்தல்.)
பைத்தலைநாகமணிவோன்றென்வெங்கைப்பனிவரைமேற்
செய்த்தலையூரனுனையிங்குவிட்டதுதேரினொரு
மெய்த்தலைநீட்டிநுழைவான்கருதிமுன்வெங்கரவன்
பொய்த்தலைகாட்டியதன்றேபண்பாடும்புலைமகனே. (௩௯௪)
(வாயின்மறுக்கப்பட்டபாணன்கூறல்.)
வெல்வீரவாள்விழிமங்கைபங்காளர்தம்வெங்கைவெற்பி
னல்வீகமழ்புயத்துங்கர்தலர்பெயர்நானுரைப்பிற்
செல்வீயுலகவொளிவியந்தேகட்செவியுமிழ்செங்
கல்வீசுவரின்றுநீவிசினைகருங்கல்லினையே, (௩௯௫)
(விருந்தொடுவந்துழிப்பொறுத்தல்கண்டிறையோன்மகிழ்தல்.)
திருந்துமரவப்பணியாளர்வெங்கைச்செழுஞ்சிலம்பி
லருந்துமமுதமருந்தாய்ப்பிணிகளைந்தாங்குமுத்து

முருந்துமனையநகையாளிதயமுனிவகற்றும்
விருந்தும்வருகதில்லென்றுமெப்போதுமெம்வீட்டினுக்கே. (௧௯௬)

{ விருந்துகண்டொளித்தவூடல்வெளிப்பட
நோக்கிச்சீறேலென்றவள்சீறடிதொழுதல். }

அறத்தாற்றறியுந்திருவெங்கைவாணரணிவரைமேல்
வெறுத்தாலுனைமுனிவாற்றுநர்தாஞ்சிலர்வேறுளரோ
வொறுத்தார்பெறுமின்பமுநினையாமலொருவர்பிழை
பொறுத்தார்புகழுமறிந்திலையேமலர்ப்பூங்கொடியே. (௧௯௭)

(இஃதெங்கையர்காணினன்றன்றென்றல்.)

மையென்றகண்டர்தம்வெங்கையிலேவண்டுவாரிசமென்
கையென்றலம்வருநல்வயலூரகன்னுற்றனரோ
பொய்யென்றறிகிலவெங்கையர்நீசெயும்பொய்ம்மையினை
மெய்யென்றுளங்கொண்டொழியாவெழுந்ததம்வெஞ்சினமே (௧௯௮)

(நின்னலதியாரையுநினையேனென்றல்.)

மின்னையலாமலுவமையில்வேணிநம்வெங்கைபுரி
மன்னையலாமலடியார்பிறரைமதிப்பரெனி
னின்னையலாம்னினையேன்பிறரையென்னெஞ்சகத்திற்
பொன்னையலாமலெதிரிலையாகியபூங்கொடியே. (௧௯௯)

(காமக்கிழத்தியைக்கண்டமைபகர்தல்.)

மறிந்தேதெருவிற்சிறுதேருருட்டுறுமைந்தனைப்போய்ச்
செறிந்தேதழுவக்கண்டுன்மகன்காணெனச்செப்பவெள்கிப்
பிறிந்தேகினளொருபெண்சோதிவெங்கைப்பெருந்தகையா
யறிந்தேனவளையிங்குன்மாமகன்றனக்கன்னையென்றே. (௨௱)

(தலைவியைப்பாங்கிதணித்தல்.)

ஏயேதிலனாவிடாதன்பர்தாம்வந்திறைஞ்சிடவு
நீயேதுமெண்ணலையென்கொல்பொன்னேவிழிநீர்ப்பரவை
தூயேறுவந்தவர்தென்வெங்கைநாயகர்தூதுவராய்ப்
போயேயிரந்துகொளத்தீர்ந்தனடன்புலவியையே. (௨௱௧)

(தலைமகள்புலவிதணியாளாகத்தலைமகனூடல்.)

விரும்பாமறவர்புரமூன்றெரித்தவர்வேணியினி
லரும்பாமதியொன்றணிந்தபிரான்வெங்கையன்னவயற்
கரும்பாமொழியென்மடமாதினுக்கெந்தக்காலமுமிவ்
விரும்பாமநமிலையாரோவறிங்கிருந்தவனே. (௨௱௨)

(பாங்கியன்பிலைகொடியையெனத்தலைவனையிகழ்தல்.)

தீம்பால்கமழுமணிவாய்ப்புதல்வற்குச்சிற்றெலும்பு
பூம்பாவையாகவருள்வோன்றென்வெங்கைப்பொருப்பிலிளங்
காம்பானதோளிமுன்வேம்புதந்தாலுங்கழைக்கரும்பாம்
வேம்பாமுனக்குக்கரும்பாயினுமின்றுவேலவனே. (௨௱௩)

(ஆயிடைமைந்தனுமாற்றாமையும்வாயில்களாகவரவெதிர்கோடல்,)
அறந்தாங்குமையவள்கொங்கைத்தழும்பழியாவுரத்தர்
பிறந்தாங்கறிகிலர்வெங்கைமன்னாதப்பிலகுமொரு
திறந்தாங்கரவிந்தவண்டோர்புன்முள்ளிநினைந்ததுபோன்
மறந்தாங்கிராமலெமைநீநினைந்ததெம்மாதவமே. (௪௱௪)

(மணந்தவன்போயபின்வந்தபாங்கியோ
டிணங்கியமைந்தனையினிதிற்புகழ்தல்.)

பிறந்தவன்றேநன்மணிநேர்புதல்வன்பிறர்கடைத்தேர்
பறந்தடைந்தாகுரம்வாய்தலிலேவரப்பண்ணினனு
மிறந்தவங்கம்புனையெம்மான்றன்வெங்கையிலிம்மையினுஞ்
சிறந்தவின்பந்தரவல்லவனையெனத்தேறினமே. (௪௱௫)

(தலைவிதலைவனைப்புகழ்தல்.)

பண்ணுற்றமென்மொழியாய்தமிழ்நூலிசைப்பாவலர்தா
மெண்ணுற்றநம்முயிர்க்காதலர்போல்பவரில்லையென்றும்
பெண்ணுற்றபங்கர்தம்வெங்கையிலேதண்பெரும்பொழில்வாய்க்
கண்ணுற்றகாதலையின்றளவாகவுங்காட்டினரோ. (௪௱௬)

(சிலைநுதற்பாங்கிமனைவினைப்புகழ்தல்.)

கேளோர்பரத்தையிற்போகாதிருத்தலிற்கீர்த்திபெற்று
நாளோடிலங்குமருந்ததியோவொப்புநாகமணி
தோளோனெறுதெய்வசூளாமணிவெங்கைத்தொன்னகரில்
வாளோவெனுங்கட்பிறைவாணுதலெங்கண்மாதினுக்கே. (௪௱௭)

(ஓதற்பிரிவு.)

(கல்விக்குப்பிரிவுதலைமகனுணர்ந்ததோழிதலைமகட்குணர்த்தல்.)

விண்ணுடையார்புகழ்நூபுரபாதர்வெல்வேனெடுங்கட்
பெண்ணுடையார்மகிழ்தென்வெங்கைமாநகர்ப்பெண்ணணங்கே
கண்ணுடையார்கற்றவரேகல்லார்கண்முகத்திரண்டு
புண்ணுடையாரெனக்கூறிநங்காதலர்போயினரோ. (௪௱௮)

(தலைமகள்கார்ப்பருவங்கண்டுபுலம்பல்.)

சிலையோடுவந்தனவென்செய்குவேன்முகில்செங்கமலன்
றலையோடுகொண்டவர்வெங்கையிலேசெந்தமிழ்முதலாங்
கலையோதுவான்விழைந்துற்றார்க்குக்கல்விக்கடலதனு
ளிலையோவொன்றேனுமருள்வேண்டுமென்னவிசைப்பதுவே. (௪௱௯)

(தலைமகளைப்பாங்கியாற்றுவித்தல்.)

என்போடரவணியெம்மான்றிருவெங்கையேந்திழையாய்
நின்போதகமன்னமன்னவர்தாமின்றுநீகளிப்பத்
துன்போடுகல்விக்கடன்மேய்ந்துசெய்யுளஞ்சோனைபெய்து
தன்போல்வருவரென்றேவந்ததாலிச்சலதரமே. (௪௱௰)

(காவற்பிரிவு)

(தோழிதலைவன்காவற்பிரிவுணர்த்தல்.)

கருமாமுகிலுறங்குஞ்சோலைவெங்கைக்கடவுண்முக்கட்
பெருமாடொழிலையொருநீபெறினும்பெறுகவென்றே

யொருமாநிலந்தனினம்முயிர்க்காவலரோங்குபுகழ்த்
திருமாறெழில்வைகுதுமென்றுபோயினர்தேமொழியே. (௪௧௧)

(தலைமகள்கூதிர்ப்பருவங்கண்டுவருந்தல்.)

கணையிலைவேலெனுங்கண்மாதுபங்கர்கருப்பவில்லிற்
கிணையிலையென்னுந்திருவெங்கைநாட்டிலிறைவவன்றே
வணையிலையென்செய்குவேன்முறையோவென்றரற்றுகினுந்
துணையிலையென்பதுகொண்டோவிவ்வாடைதுயர்செய்வதே. (௪௧௨)

(தோழியாற்றுவித்தல்.)

பனிபொருசெஞ்சுடரன்னர்திருவெங்கைப்பாவைநல்லாய்
முனிபொருவிந்தமெனவேகணவர்தம்முன்புரத்திற்
கனிபொருமெல்லிதழ்நன்மாதர்கொங்கை கரந்திடப்பன்
னுனிபொருகாலம்வரக்காதலர்தமைநோக்குவரே. (௪௧௩)

(தூதிற்பிரிவு.)

(தூதிற்குப்பிரிவுதலைமகனாலுணர்ந்ததோழிதலைவிக்குணர்த்தல்.)

சடைநின்றகங்கையர்வெங்கையிலேயொருசந்துசென்றார்
படைநின்றகண்ணிநங்காவலரின்றுபற்றுசொன்றுதான்
றொடைநின்றநேரிசைபுன்குறளுந்தனிச்சொல்லுமுற
விடைநின்றுகூட்டுதல்போலிருவேந்தையிசைப்பதற்கே. (௪௧௪)

(தலைவிமுன்பனிப்பருவங்கண்டுவருந்தல்.)

கருங்காளகண்டர்திருவெங்கைவாளர்நகவெற்பிற்
பொருங்காவலர்தம்பகைதணிப்பான்முனம்போயினவர்
பெருங்காலமுன்பனிநாள்வந்தும்வந்திலர்பேதையர்மேல்
வருங்காமவெஞ்சரந்தன்னையுமாற்றமனமதித்தே. (௪௧௫)

(தோழியாற்றுவித்தல்.)

போதாகிவந்தபிறைவேணியர்வெங்கைப்பொன்னகரிற்
காதாகிவந்தநல்வள்ளையிற்றூங்குநங்குழைசேர்
மாதாகிவந்தசெந்தேனேயவர்தம்வரவுசொலத்
தூதாகிவந்ததுமுன்பனிநாண்மன்னர்தூதுவர்க்கே. (௪௧௬)

(துணைவயிற்பிரிவு)

கடுக்கையணிந்தமுடியோன்றிருவெங்கைக்காரிகையா
யுடுக்கையிழந்தவன்கையோர்பொருளையொழித்ததனைத்
தடுக்கைவிரைந்ததுபோனட்டவேந்தன்றனக்குதவி
யடுக்கைவிழைந்துநினைவிடுத்தார்நட்பறிந்தவரோ. (௪௧௭)

(தலைமகள்பின்பனிப்பருவங்கண்டுவருந்தல்.)

நன்பனிவெண்மதியொன்றுடையோன்வெங்கைநாட்டொருத
மன்பனிருந்துயர்தீர்துணையாகவடலரிபோன்
முன்பனிகஞ்செலச்சென்றவர்காண்கிலர்மூடியெங்கும்
பின்பனிபெய்துபெருந்துயர்வேலைபெருகுவதே. (௪௧௮)

(தோழியாற்றுவித்தல்.)

நின்பாலுதவிநினைந்துவந்தார்கைந்நிமிர்த்தலரும்
பின்பாப்பனிவருநாளயில்வேற்கட்பிறைநுதலாய்
தன்பாதமென்றலைக்கீவோன்றிருவெங்கைதன்னிலொரு
மன்பாலுதவிநினைந்துமுன்போயினமன்னவரே. (௪௧௯)

(பொருள்வயிற்பிரிவு.)

(பொருள்வயிற்பிரிவுதலைமகனாலுணர்ந்ததோழிதலைமகட்குணர்த்தல்.)

திரைப்பாலெழுநஞ்சமுண்டோன்றிருவெங்கைத்தெண்கயத்தின்
விரைப்பானலங்கண்விளங்கிழைபாய்மகமேருவென்னும்
வரைப்பானிதியந்தரற்கேகினர்கடன்மாநிலத்தி
னிரப்பார்மிடிகள்புகுமிடந்தேடவிறையவரே. (௪௨௰)

(தலைவியிளவேனிற்பருவங்கண்டுபுலம்பல்.)

போதந்திறைப்பவழுதென்றல்பற்றுதல்போலவிளந்
சூதங்கழைக்குமிந்நாள்கண்டிலார்கொறுணிவொடுநால்
வேதந்துதிக்குந்தனிமூலகாரணர்வெங்கைவெற்பிற்
பாதஞ்சிவக்கப்பொருள்வயிற்போயினபாதகரே. (௪௨௧)

(தலைவியைத்தோழியாற்றுவித்தல்.)

நாகூரரவணிவெங்கைபுரேசர்நன்னாட்டிலொரு
பாகூர்மணிநெடுந்தேரன்பர்கேட்டுநின்பாலடைந்தா
ராகூழ்பெறவலிவெஞ்சினவேள்வந்தமர்புரியக்
கூகூவெனவிளமாவேறியேகுயில்கூவுவதே. (௪௨௨)

(தலைமகன்றலைமகளதுருவுவெளிப்பாடுகண்டுசொல்லியது.)

ஏர்க்குங்கனன்மழுவார்வெங்கைவாணர்குளிர்சிலம்பிற்
சீர்க்குங்கபலுங்கருமேகமுந்தொண்டைத்திங்கனியும்
வார்க்குங்குமமுலையுங்கொண்டுமாதெதிர்வந்துநின்றாள்
பார்க்குந்திசைதொறுமெங்கேயிம்மாயைபயின்றதுவே. (௪௨௩)

(பாசறைமுற்றிமீண்டுர்வயின்வந்ததலைவன்பாகற்குச்சொல்லியது.)

கார்கண்டகண்டர்திருவெங்கைவாணர்கநகவெற்பிற்
போர்கண்டமன்னவர்நல்வலவாநம்புரவிநெடுந்
தேர்கண்டபோதிலிரிந்தாரினிமணித்தேரெதிர்செந்
நீர்கண்டமீனெனவுண்மகிழ்ந்தேவருநேரிழையே. (௪௨௪)

தலைமகளோடிருந்ததலைமகன்கார்ப்பருவங்கண்டுமகிழ்ந்துசொல்லியது

கயலோடனையவிழியாளும்யானுங்கலந்துபுணர்
செயலேமருவியிருக்கின்றனமலர்த்தேனொழுகி
வயலேவிளையுந்திருவெங்கைவாணர்வரையிலவரும்
புயலேயினிமதியொன்றிமுக்காலும்பொழிபொழியே. (௪௨௫)

வெங்கைக்கோவை-முற்றிற்று.

